# வள்ளுவ வாயில்

(வெண்பா – உரைவீச்சு)





கவிமாமணி

இலந்தை சு. இராமசாமி



சுந்தர் பதிப்பகம் – சென்னை – 61

வள்ளுவ வாயில் 2


## FIRST EDITION MAY 2001

BIBILIOGRAPHICAL DATA

| | |
|---|---|
| Title | VALLUVA VAYIL |
| SUBJECT | POEM |
| AUTHOR | KAVIMAMANI ELANDHAI SU RAMASAMI |
| COPY RIGHT | THE AUTHOR |
| LANGUAGE | TAMIL |
| PAPER | WHITE PRINTING |
| SIZE OF THE BOOK | 18X12.5CMS DOUBLE CROWN |
| NO. OF PAGES | 148 |
| PUBLISHER | THE AUTHOR<br>SUNDAR PATHIPPAKAM<br>2,29TH STREET<br>THILLAI GANGA NAGAR<br>CHENNAI-600061 |

# முதல் வாசகன் குரல்

*பேராசிரியர் சு.பசுபதி*

**வெள்ளம்மனப் பள்ளந்தனில் பெய்வெண்டளைப் பெருக்கம்
உள்ளந்தனை விரிவாக்கிடும் உரைவீச்சதின் சுருக்கம்.
அள்ளக்குறை வில்லாப்பயன் அளிக்கும்புகழ்க் கோயில்,
வள்ளல்தமிழ் முனிவள்ளுவர் வாழ்மாளிகை வாயில் !**

ஒன்றே முக்கால் அடித் திருக்குறள்; மூன்றே முக்கால் அடி வெண்பா. இரண்டிற்கும் ஏதோ விட்டகுறை, தொட்ட குறைதான்! தமிழ்க் கவிதைச் சரித்திரத்தில் குறளை விரிவாக்கி வெண்பாக்களாக்கிய முயற்சிகள் பல.

இவற்றுள் சிதம்பரம் பச்சைக் கந்தையர் மடத்துச் சென்ன மல்லையர் இயற்றிய 'சிவசிவா' வெண்பா", சிதம்பரம் ஈசானிய மடத்து இராமலிங்க சுவாமிகள் அருளிய 'முருகேசர் முதுநெறிவெண்பா', கவிராஜ பண்டிதர் சகவீரபாண்டியனாரின் ' திருக்குறட் குமரேச வெண்பா' போன்ற நூல்கள் சிறப்புள்ளவை.

கவிமாமணி இலந்தை இராமசாமி நமக்களிக்கும் 'வள்ளுவ வாயில்' திருக்குறளை வேறு நோக்கில் அணுகுகிறது. ஒவ்வொரு அதிகாரத்தின் சாரத்தையும் ஒரு நேரிசை வெண்பாவாகச் சமைத்து, அதற்கோர் உரைவீச்சின் மூலம் விளக்கமும் கொடுக்கிறார் இலந்தையார்.

வள்ளுவ வாயில் 7

ஆரம்பமே மங்களமாகத் தொடங்குகிறது! " முதலாய், ..." என்று ஓங்கார ஒலியுடன் பிள்ளையார் சுழி போடுகிறார். 'மு' என்பது அ+உ+ம் என்ற ஓங்காரத்தின் மறு உருதானே? ( அருணகிரிக்கு முருகன் எடுத்துக் கொடுத்த 'முத்தைத் தரு' நினைவுக்கு வருகிறது! )

முருகனின் பன்னிரு கண்கள் போல், தொடர்ந்து வரும் பன்னிரு வரிகள் வள்ளுவரின் மாளிகையின் முதல் அறைக்கு ஓர் ஒளி விளக்கம் கொடுக்கின்றன !

முதல் வெண்பா முழுவதையும் சுவைக்கலாமே!

**முதலாய், அறிவின் முடிவாய், பொறிதீர்**
**இதமாய், உவமை இலதாய் - விதமாய்ப்**
**பிறவிப் பிணியறு பெற்றியாய் உள்ள**
**இறையடிக் கீழே திடர்?**

" இறையடிக் கீழே இடர் ஏது? " உண்மைதானே? முதல் அதிகாரத்தின் பத்துக் குறள்களின் எழுபது 'சிமிழ்' களின் சாரத்தைப் பதினைந்து 'சிமிழ்'களில் அளிக்கிறார் கவிமாமணி !

கவிஞரின் உரைவீச்சும் நம் செவியில் இயைபுத் தொடை கொடுக்கும் ஓசை நயத்துடன், புது விதமான 'புதுக் கவிதை'யாய் ஒலிக்கிறது !

'பழைமைக்குப் பழைமையாய், புதுமைக்குப் புதுமையாய்' என்றும் மிளிரும் 'வெண்டளை வேதத்திற்குப்' புதுமையான 'உரைவீச்சு' மாலை சரியே! சில எடுத்துக் காட்டுகள்:

அன்பினை அடைக்க உண்டோ வழி?
கண்ணீர் அதனைக் காட்டும் மொழி.

இன்சொலில் உள்ளது ஈரம்
அதுதான் சொல்லின் சாரம்.

பின்னோக்கிச் சென்று முன்பாயும் ஆடு
ஒடுங்கிப்பின் பாய்பவன் ஆளுவான் நாடு.

இவளின் ஒருநோக்கால் நோய் வரும்
மறுநோக்கு அந்நோய்க்கு மருந்து தரும்.

பலவெண்பாக்கள் 'புதுக்' குறள்களை உள்ளடக்கி அழகுக்கு அழகு சேர்க்கின்றன. நான் ரசித்த சில குறள்கள்;

காலம் கடத்தல், மறதி துயில் ஆகியவை
காலன்பால் செல்வோர் கலம்.

செய்திடும் முன்னே தெரியப் பறைசாற்றல்
செய்கைக்கோர் ஊறாம் செயல்.

உப்புக் கலப்பதுபோல் ஊடல் கலப்பதுதான்
ஒப்பில்லா இன்ப உவப்பு.

கவிமாமணி இலந்தை சு இராமசாமி

இலந்தையாரின் வெண்பாக்களில் அங்கங்கே
நவரசங்களும் சுரக்கின்றன! உதாரணமாக,
புல்லறிவாளரைப் பற்றிக் கவிஞர்,

*சொன்னாலும் தான்தேரான், சொந்த மதியில்லான்*
*இன்னல் தரும்பிணிக் கீடாவான்- அன்னவன்*
*ஆடை உடுத்தாலும் அம்மணந்தான், அன்னவர்க்கு*
*மேடை கொடுத்தாலும் வீண்.*

என்று சொல்லியுள்ளதைப் படித்தபோது சிரிப்புப்
பீறிட்டது எனக்கு!
இலந்தையார் சொல்வதுபோல்,
நல்லவன் செல்வம் நடுவூர்ப் பழம்போல
எல்லார்க்கும் நன்றாம் இனிது.

கவிமாமணியின் தமிழ்ச் செல்வம் நமக்கெல்லாம்
இன்றுபோல் என்றும் உதவும் என்ற நம்பிக்கையுடன்
இவ்வுரையை நிறைவு செய்கிறேன்.

இலந்தையார் இராமசாமி இரத்தினமான ஆசாமி !
இலங்கிடும் இந்நூலோ இனியமணிச் சொற்பூமி !

பேராசிரியர் டாக்டர் பசுபதி அவர்கள் கனடா டொராண்டோ வில
உள்ள டொராண்டோ பல்கலைக் கழகத்தில் மின்னணு மற்றும்
கணினித் துறையில் பணிபுரிகிறார்.
நல்ல கவிஞர், சிந்தனையாளர், ஆராய்ச்சியாளர். பழகுதற்கு இனிய நண்பர்.
முதல் வாசகனாக வள்ளுவ வாயிலை அறிமுகப் படுத்தும் அவருக்கென் நன்றி.
கையெழுத்துப் பிரதியில் இதைப் படித்து நல்ல கருத்துக்களைச் சொன்ன பாரதி சுராஜ்
அவர்கட்கு நன்றி

இலந்தை

## என் உரை

திருக்குறள், ஏழுசிமிழ்களுக்குள் இவ்வண்டப்
பேரொளியின் ஆழ அகலம் அளந்திருக்கும் பேராற்றல்.
நாளைக்கு என்னதேவை என்பதை நேற்றே கண்ட
அதிசயம்.
மறைவாகச் சொல்லாத மறை.
தமிழன் உலக அரங்கில் தலைநிமிர்ந்து நிற்க
அடித்தளம் அமைத்துத் தந்த ஆதாரம்..
அந்த அற்புதத்தை எத்தனையோபேர் எத்தனையோ
விதமாக அனுபவித்திருக்கிறார்கள்அந்த அகண்ட .
மாளிகைக்கு ஒரு வாயில் அமைக்கும் சிறு முயற்சியே
இந்நூல்.

சென்னையில் வள்ளுவர் கோட்டம் கட்டி முடிக்கப்
பெறும் தருவாயில் ,அதன் திறப்பு விழாவுக்கு ஒரு சில
மாதங்களுக்கு முன் தமிழக அரசு திருக்குறள் போட்டி
ஒன்று அறிவித்திருந்ததுதிருக்குறள் அதிகாரத்தின் சாரத்தை .
இப்படிக் குறைந்தது .ஒரு வெண்பாவுக்குள் அடக்க வேண்டும்
40 வெண்பாக்களாவது எழுதி அனுப்ப வேண்டும்அதில் .
சிறந்ததற்குப் பரிசுநான் ஐம்பது திருக்குறள் அதிகாரங்களுக்கு .
ஆனால் திடீரென நிகழ்ந்த .வெண்பா எழுதி அனுப்பினேன்
அரசியல் அதிரடி மாற்றங்களினால் போட்டி

நான் எழுதிய வெண்பாக்களின் பிரதி .நடைபெறவில்லை .ஒன்று பெட்டி ஒன்றுக்குள் உறங்கிக்கொண்டிருந்தது

இரண்டாயிரமாவது ஆண்டு மே மாதம் பித்தப்பை நீக்கும் அறுவைசிகிச்சை ஒன்று எனக்கு நடந்தது.
அதன் பிறகு டைபாய்டு காச்சல்.ஒருமாதம் ஓய்வு.

அப்பொழுது இவ்வெண்பாப் பிரதி என்கண்ணில் பட்டது.

23 ஆண்டுகட்குப் பின்பு அதன் உறக்கம் கலைக்கப் பட்டு 133 அதிகாரங்களுக்கும் வெண்பா எழுதி முடித்தேன்.

சென்னை பாரதி கலைக்கழகக் கவியரங்கம் ஒன்றில் இவ் வெண்பாக்கள் சிலவற்றைப் படித்துக் காட்டிய பொழுது, அது பெரிதும் வரவேற்கப்பட்டதுஆறாம்திணை மின்வலை ஏட்டில் . இதைப் பாராட்டி வெண்பாமேடைப் பகுதியில் கட்டுரை ஒன்று ஒவ்வொரு அதிகாரத்துக்கும் ஒரு சுர .பிரசுரம் ஆகியதுுக்க விளக்கம் எழுதினால் நன்றென்று நண்பர்கள் ஆலோசனை கூறினார்கள்.

விளக்கம் என்பதற்குப் பதில் 12 வரிகளில் உரைவீச்சு ஒன்று எழுதலாம் என்று கருதினேன். இதற்கிடையில் அமெரிக்கா செல்ல நேர்ந்தது. அங்கேயே இந்த உரைவீச்சை எழுதி முடித்தேன்.

வெண்பா, உரைவீச்சு, இரண்டையும் தொகுத்துள்ளேன். என்னைப் பெரிதும் கவர்ந்த குறட்பாக்களே இவ்வுரைவீச்சில் இடம்

பெறுகின்றன. இது நடுக்கூடத்தில் ஏற்றிவைக்கப்
பெற்றுள்ளஒரு குத்துவிளக்கு. ஒளி, கூடம் முழுதும் பரவும்.

இதைப் படிக்கும் போது, அந்த அகண்டஜோதியைத் தரிசிக்க
வேண்டும் என்ற ஆவல் ஒரு சிலருக்கேனும் எழுந்தால்
,அதுவே இந்நூலின் வெற்றி.

வாயிலுக்குள் வாருங்கள்.
நிச்சயம் மாளிகைக்குள் போகத் தோன்றும்.

20-4-2001
இலந்தை சு இராமசாமி

## Contents

## 1 கடவுள் வாழ்த்து

முதலாய்,அறிவின் முடிவாய்,பொறிதீர்
இதமாய்,உவமை இலதாய்-விதமாய்ப்
பிறவிப் பிணியறு பெற்றியாய் உள்ள
இறையடிக் கீழே திடர்?

*

எழுத்துக் கெல்லாம் ஆதி அகரம்
உலகுக் கெல்லாம் இறைவன் சிகரம்

அவனே அறிவின் எல்லை
அவன் பதம் பணியாதார் படித்தும் பயனில்லை

இறைவன் விருப்புற்றுக் கொள்ளாதவன்
எவரையும் வெறுப்புற்றுத் தள்ளாதவன்

அவன் இதமானவன்
நாம் நெருங்கப் பதமானவன்

அவன் தனக்கு உவமை இல்லாதவன்
அவனைப் பணியாதான் 'செல்லாதவன்'

இறையடிக் கீழே இடர் ஏது?
அவன் பதம் பணிந்தால் பிறவி கிடையாது.

## 2 வான் சிறப்பு

கெடுப்பதும், பின்னர் எடுப்பதும், நன்மை
கொடுப்பதும், மண்ணில் குளுமை-தொடுப்பதும்
தேனமிழ் தாகத் திகழறம் காப்பதும்
வானம் சுரக்கும் மழை.

*

இழையாக விழுகிற மழையில்லை எனின்
பிழையே மலியும் மழையே அமுதம்

அதிக மழையோ
ஆக்கம் கெடுக்கும்

அளவாய்ப் பொழிய
அனைத்தும் கொடுக்கும்

தானமும், தவமும்
மழையின்றி இல்லை

அறத்தினுக் கெல்லாம்
அதுதான் எல்லை.

மழையே மருந்து
மழையே விருந்து.

## 3 நீத்தார் பெருமை

அறிவால் பொறிகாத்(து) அறத்தில் நிலைத்து
குறையாத அன்பின் குணத்தார்-முறையாய்த்
துறந்தார் பெருமை சொலவரிதே,செம்மை
நிறைந்தாரே வீட்டின் நிலம்.

*

நீத்தார் பெருமை
நினைத்தலும் அருமை

புலனடக்கி மூத்தார்
புகழ்புரிந்த நீத்தார்

அறம்காத்தல் அவர்நிலை
அரிதென்ப தவர்க்கிலை

ஐந்தவித்தான் மாட்சி
இந்திரனே சாட்சி

எவ்வுயிரும் ஒன்றாய்
அன்புசெய்வார் நன்றாய்

குணமென்னும் குன்று
வாழ்வார் கோபத்தினை வென்று.

## 4 அறன் வலியுறுத்தல்

அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா அறம்செய்தல் இன்பம்செழிக்கின்ற-
நெஞ்சத்தில் மாசில்லா நீர்மையதே நல்லறமாம்
எஞ்சாது செய்க இனிது.

*

மாசில்லா மனமே நல்லறம்
மற்றவை எல்லாம் ஆரவாரம்

சிறப்பும் செல்வமும் கொடுக்கும்
அறத்தினாலே யாவும் நடக்கும்

அறம் செய்ய ஏது வேளை?
தள்ளிப் போடாதே நாளை.

அறத்தைவிட ஆக்கம் ஏது?
அறம் செய்தால் உண்டோ தீது?

அழுக்கா றவா வெகுளி இன்னாச்சொல்
இழுக்காது செய்யும் ஓலுபுளுஒளலு ஒளலு

அறம் வாழ்நாள் வழியடைக்கும் கல்
இயன்றவரை அறவழிச் செல்.

## 5 இல்வாழ்க்கை

அன்பும் அறனும் அகங்கொண்ட இல்வாழ்க்கை
தன்னலம் இல்லாத தத்துவமாம்இன்பமுடன்-
யாவர்க்கும் காப்பாய் அமையும் இல் வாழ்க்கையதே
தேவர்க்கும் மேலாம் திரு.

*

இல்வாழ்வான் யாவர்க்கும் துணையாவான்
அவனுக்கு அவனே இணையாவான்

அறன்வழி இல்வாழ்தல் நன்று
அதுதானே உயர்வான ஒன்று

இயல்பினால் இல்வாழ்க்கை வழியில் செல்பவன்
முயல்வாருள் எல்லாம் தலையாகி வெல்பவன்

பழியஞ்சி, பிறன்பழியா வாறு
வாழுதல் நல்லருட் பேறு

அன்பும் அறனும் கொண்டு
வாழப் பண்பும் பயனும் உண்டு

வாழ்வாங்கு வாழ்ந்திடும் வண்ணம்
வாழுவார் தெய்வமாம் திண்ணம்.

## 6 வாழ்க்கைத் துணைநலம்

வளத்தக்க வாழ்வும் மனைத்தக்க மாண்பும்
கொளத்தக்க கற்புக் குணமும்உளத்தினிலே-
வெல்லும் நலச்சொல்லும் மேவும் துணையுள்ள
இல்லத்தில் இல்லாத தில்.

*

மனைவி அமைவது பேறு
அமைந்தவன் பீடுகொள் ஏறு

வருவாய்க்குள் வாழ்பவள் நல்லாள்
அவள்தானே மாண்புடைய இல்லாள்

கற்பெனும் திண்மை கவசம்
பெற்றால் பெருமைகள் அவள்வசம்

தன்னவனைப் பேணி தன்ன, தன்சொல்லைக்
காக்கும் சோர்விலாள் பெண்மைக்கு எல்லை

இல்லவள் மாண்பானால் இல்லாததில்
இல்லவள் கோடினால் இல்லாமோ இல்?

மனைமாட்சி என்பது மங்கலம்
மக்கட்பேறு அதன் நன்கலம்.

## 7 மக்கட்பேறு

குழல்யாழை விஞ்சும் குழந்தை மழலை
எழுபிறப்பும் காக்கும் இதமாம்பழிபிறங்காப்-
பண்புடைய மக்களே பாரினில் பெற்றோர்க்கு
நண்ணும் உவகை நலம்.

*

அறிவறிந்த மக்கட்பேறு
அஃதே சிறந்ததெனக் கூறு

அமிழ்தினும் இனியது எது?
மக்கள் கை அளாவிய கூழாம் மது.

குழலும் யாழும் பின்னால்
மக்கள் மழலை முன்னால்

மழலை கேட்டல் செவிக்கின்பம்
உடலைத் தொடுதல் மெய்க்கின்பம்

மகனின் உதவி
என்நோற்றான் தந்தை எனச் சொல வாழ்தல்

தந்தையின் கடனோ
அவைக்கண் மகனை முன்னிலை சூழ்தல்.

## 8 அன்புடைமை

அன்பினைப் பூட்டி அடைக்கற் பாலதோ?
தன்னிலை கண்ணீரால் தான்தரும்அன்பும்-
உயிர்நிலை ஆகி உயிரையும் நல்கி
உயர்நிலை தானே உறும்.

*

அன்பினை அடைக்க உண்டோ வழி?
கண்ணீர் அதனைக் காட்டும் மொழி

அறத்துக்கு மட்டுமா அன்பு சார்பு
மறத்துக்கும் அன்புதான் 'மார்பு'

அன்பின் பக்கமே நல்லறம் சாயும்
அன்பிலதனை அறமே காயும்

அன்புடையார் யாவும் கொடுப்பார்
அன்பிலார் தனக்கே எடுப்பார்

வன்பாற்கண் வற்றல் மரம் தழைக்குமா?
அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை செழிக்குமா?

அன்பகத் தில்லான் அழகெல்லாம் வீண்.
அன்புடையார்க்கு அன்புதான் பூண்.

## 9 விருந்தோம்பல்

இனிய மொழிகூறி ஏற்றங்கள் செய்து
கனிவாய் விருந்தோம்பிக் காத்தால்நனிசிறந்த-
செய்யாள் உறைந்திடுவாள், தேவர்களும் காத்திடுவார்
எய்துவ தெல்லாம் இனிது .

*

அகனமர்ந்து ஓம்புக விருந்து
அங்கே செய்யாள் காப்பாள் இருந்து

வெளியில் விருந்தினர் இருக்கும் போது
அமுதமே ஆனாலும் உண்ணல் தீது

முகம் திரிந்தால் விருந்தின் முகம் வாடும்
முகமலர்ந்தால் ஆக்கமெலாம் கூடும்

தொடர்ந்து விருந்தை எவர் எதிர்பார்ப்பார்
வானவர் விருந்தாய் அவரை வரவேற்பார்

விருந்து கொடுப்பதால் இல்லை கேடு
விருந்தைத் தடுப்பதால் இல்லை பீடு

விருந்தே இல்வாழ்க்கைக் கேற்றம்
விருந்தோம்ப ஆகாது தடுமாற்றம்.

## 10 இனியவை கூறல்

இன்சொலால் தீயவெலாம் இற்றுவிழும்,நன்மைவரும்
இன்சொலால் நல்லறங்கள் எய்திடலாம்இன்சொல்லே-
எல்லோர்க்கும் நல்லணியாம் என்றால் அதைவிட்டுப்
பொல்லாத சொல்லேன் புகல்?

*

இன்சொலில் உள்ளது ஈரம்
அதுதான் சொல்லின் சாரம்

ஈதல் மிகவும் சிறந்தது
இன்சொல் அதனினும் உயர்ந்தது

இன்சொல்லே ஒருவர்க்கு அணியாகும்
இன்னாச் சொல் ஒருவர்க்குப் பிணியாகும்

இன்சொல் உரைப்பார்க்குப் பகையேது?
அவருடன் எவர்க்கும் இலை வாது.

இன்சொல் விடுத்து இன்னாச் சொல் பகர்வதுவா?
கனி இருப்பக் காயைக் கவர்வதுவா?

நல்லவை நாடி இனிய செயின்
அல்லவை தேயும், அறம் அதன் வயின்.

## 11 செய்ந்நன்றி அறிதல்

நன்றி மறப்பது நன்றன்று, செய்ந்நன்றி
கொன்றாலோ உய்வில்லை,கொன்றன்னஇன்னாமை-
நல்கினும் முன்செய்த நன்றியை எண்ணிட
இல்லாது போகும் இடர்.

*

செய்யாமற் செய்த உதவிக்குக் கைமாறு
வையகமும் வானகமும் ஈடாமோ கூறு

காலத்திற் செய்த நன்றி சிறிதான போதும்
ஞாலத்தின் பெரிதாம், ஈடில்லை ஏதும்

பயன் தூக்கார் செய்த உதவி
கடலினும் பெரிய பதவி

தினைத்துணை செய்திடும் நன்மை
பனைத்துணை யாக வளர்ந்திடும் பன்மை

துன்பத்துள் துப்பாயார் நட்பைத் துறவற்க
மாசற்றார் கேண்மை என்றும் மறவற்க!

செய்ந்நன்றி கொன்றிடல் தீது
கொன்றால் அவர்க்கு உய்வுதான் ஏது??

## 12 நடுவு நிலைமை

நெஞ்சத்துக் கோடா நெறிசான்றோர்க் காபரணம்
வஞ்சத்தால் அல்லசெயின் வாழ்வரிதுஎஞ்ஞான்றும்-
ஓர்பக்கம் சாயா உயர்சான்றோ ரின்வறுமை
ஊர்மக்கள் கைகூப்பும் ஒன்று

*

நடுவு நின்றவனின் வாழ்வு
எங்ஓ‘ளும் அடைவதில்லை தாழ்வு

சான்றோர்க்கு நல்லணி கோடாமை
நல்லது நடுவிகத்தல் நாடாமை

தக்கார் தகவிலர் யாரென்றே
அவரவர் எச்சமே காட்டும் நன்றே

நடுவு நின்றான் வீழ்ந்தாலும் குன்று
வையகம் போற்றிடும் அவன் பக்கம் நின்று

நடுவிகந்து வருகின்ற ஆக்கம்
வாழ்வின் நலமெல்லாம் போக்கும்

செப்பம் உடையவன் ஆக்கம்
சந்ததிக்குக் காப்பாகும் ஊக்கம்.

## 13 அடக்கமுடைமை

அடக்கம் அமரருள் ஆட்படுத்தும், நன்றே
அடக்கத்தைக் காக்க, அடுஞ்சொல்தொடுத்துவிடின்-
ஓர்சொல்லும் போதும் உயர்வழிக்க, ஆகையினால்
யார்மாட்டும் நாகாத்தல் ஆம்.

*

அடக்கம் எவருக்கும் வேண்டும்
அது சீர்மையைத் தூண்டும்

அடக்கம் அமரருள் உய்க்கும்
அடங்காமை ஆரிருள் உய்க்கும்

நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிதாகும் தேற்றம்

எதைக் காக்கத் தவறி விட்டாலும்
நாகாக்கத் தவறாதே எக்காலும்

ஒரு தீய சொல் போதும், கொன்றிடும் சேமம்
ஒருமையுள் அடங்க எழுமையும் ஏமம்

அடங்காதான் வாழ்வில் நலம் ஏறாது
நாவினாற் சுட்டவடு ஆறாது.

## 14 ஒழுக்கமுடைமை

ஒழுக்கம் உயிரின் உயர்வாம், இழுக்கம்
இழிந்த பிறப்பாம், எனவேஒழுக்கத்தின்-
ஒல்கார் உரவோர், ஒழுக்கம் உடையவர்
சொல்லார் மறந்தும்தீச் சொல்.

*

ஒழுக்கம் விழுப்பம் கொடுக்கும்
இழுக்கம் மேன்மை கெடுக்கும்

ஒழுக்கத்தைப் போலத் துணை வேறில்லை
அதுகொண்டு சேர்க்கும் உயர்வின் எல்லை

நல்லொழுக்கம் நன்றிக்கு வித்து.
தீயொழுக்கம் துன்பத்தின் சொத்து

ஒழுக்கத்திலே மனம் வேட்டார்
தீயசொல் மறந்தும் சொலமாட்டார்

ஒழுக்கம் குன்றப் பெருமை குன்றும்
இழுக்கம் சேர எல்லாம் பொன்றும்

எவ்வளவு கற்றும் பயன் ஏது
உலகத்தோடு ஒட்டொழுகல் கல்லாத போது?

## 15 பிறனில் விழையாமை

பிறன்மனை நோக்காமை பேராண்மை,போற்றும்
அறன்பிற செய்யானா னாலும்பிறன்கடை -
நிற்காப் பெருமை நெறிபெரிது,அஃதென்றும்
தற்காப்பாய் ஆகும் தமக்கு.

*

அடுத்தவன் மனைவிமேல் ஆசைப்படுபவன்
அறத்தின் வழிமாறிச் சென்று விடுபவன்

பிறன்மனை நோக்காமை பேராண்மை
அதுதான் அறன்வழிச் செல்லும் மேலாண்மை

பிறனில் விழைந்து அவர் தோளில் சாயும்
ஒருவன் மேன்மைகள் விரைவில் சாயும்

பழி பாவம், அச்சம் பகையென நான்கும்
இல்லிறப்பான்கண் என்றும் தேங்கும்

ஞாலத்தில் நலக்குரியார் யார்?
பிறர்க்குரியர் தோள் தோயாதார்

ஏலும் எனக்கென இல்லிறப்பான்
பழிசேர, எஞ்ஞான்றும் மேன்மை துறப்பான்.

## 16 பொறையுடைமை

பொறுத்தாருக் கென்றும் புகழ்பெருகும், நன்றாம்
மறுத்திகழ்வார் தன்சொல் மறத்தல்நி-றையுடைமை
நீங்காமை வேண்டின் நெறியாய்ப் பொறையுடைமை
தாங்கிட வேண்டும் தலை.

*

அகழ்வாரைத் தாங்கும் நிலம்
இகழ்வார்ப் பொறுத்தல் நலம்

பொறையுடைமை போற்றுகின்ற போது
நிறையுடைமை நீங்கா தப்போது.

ஒறுத்தார்க்கு இன்பம் ஒருநாள்
பொறுத்தார்க்கு என்றும் திருநாள்

தீங்கிற்கு எதிராகச் செய்யாதே தீங்கு
நெஞ்சத்தில் நோகாமல் நீயதைத் தாங்கு

அளவிறந்த இன்னாமை செய்தாரை ஒறுத்து
ஒதுக்காமல் தகுதியால் வெல்க பொறுத்து

மாற்றானின் இன்னாச்சொல் தாங்குதல் நன்று
துறந்தாரின் தூய்மையை விஞ்சும் அது வென்று.

## 17 அழுக்காறாமை

அழுக்கா றிலாமல் அமைந்த ஒழுக்கம்
இழுக்கா றிலாத இயல்பாம்அழுக்காறு-
கொண்டவன் வீட்டில் குடியிருப்பாள் மூதேவி
உண்டிக் குடைக்குமஃ தூறு.

*

பொறாமை என்னும் ஒரு பாவி
அது கொண்டான் வீட்டில் குடியிருப்பாள் மூதேவி

அழுக்கா றிலாத இயல்பு
ஒழுக்காய்க் கொள்ளல் உயர்வு

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம்
வீழ்ந்திட வைக்கும் அழுக்காறெனும் குற்றம்

அறனாக்கம் வேண்டாத பேரே
பிறனாக்கம் பேணாது அழுக்கறுப்பாரே

விருப்புக்கெல்லாம் மிகச் சிறந்த விருப்பு
அழுக்காறு கொஞ்சமும் இல்லாத இருப்பு

அழுக்கா றின்மையால் கெட்டார் இல்லை
அழுக்காறு கொண்டதால் உயர்ந்தார் இல்லை.

## 18 வெஃகாமை

மற்றவ ரின்பொருளை வெஃகல் மதிப்பழிக்கும்
கற்றவர் அஃதைக் கருதாரேஉற்ற-
பொருளில்லை என்றாலும் போயொன்றை வெஃகார்
அருள்நின்ற காட்சி யவர்.

*

பிறன் பொருள் வெஃகல் கூடாது
வெஃகாது வாழ்பவன் செல்வம் வாடாது

அறன்வழி இன்பம் அடைதல் ஆற்றுவார்
பிறன்பொருள் வெஃகா நெறியைப் போற்றுவார்

இலையெனப் பிறன்பொருள் வெஃகார் பெரியர்
இவரே கேடற்ற காட்சிக்கு உரியர்

படித்ததால் வருகிற பயன்தான் ஏது
அடுத்தவன் பொருள் கவர அவாவுறும் போது?

அறனறிந்து வெஃகா அறிவுடையார் மாட்டு
திறனறிந்து செய்யாள் செல்வாள் வழிகேட்டு

வேண்டாமை என்னும் செருக்கு வெற்றி தரும்
வேண்டிக் கவரக் கேடு ஒற்றி வரும்.

## 19 புறங்கூறாமை

கண்டக்கால் நன்றுரைத்து காணாக்கால் தீயபல
விண்டுரைக்கும் தன்மையுள்ளோர் மேலல்லர்கண்டபடி-
மற்றவர் குற்றம் வரித்திடுமுன் தன்னிடத்தே
உற்றகுறை தேர்ந்திடின் ஏ ஊறு (து)?

*

அறவழி வாழானாயினும் சென்று
புறங்கூறா னாயிடின் அதுமிக நன்று

புறங்கூறி வாழ்வதில் கேடு வரும்
அதனினும் சாதல் ஆக்கம் தரும்

முன்னின்று பொல்லாத சொன்னாலும் சொல்க
பின்னின்று பின்னோக்கரி சொற்கள் சொல்லற்க!

புறஞ்சொல்லல் சுற்றத்தைப் பிரிக்கும்
பிறன்பழி கூறல் நட்பை முறிக்கும்

புறம் சொல்பவன் அறம் சொன்னால்
நன்றெனினும் உலகம் தள்ளும் பின்னால்

ஏதிலார் குற்றம்போல் காண்க தன்குற்றம்
தீதிலை, வாழ்வில் என்றுமே கொற்றம்.

## 20 பயனில சொல்லாமை

பாரித் துரைக்கும் பயனில சொல்வான்தன்
சீருடமை நீங்கும்,சிறப்போடேயாரும்-
பயனுடைய சொற்சொல்க,பண்பஃதே, ஆய்ந்து
நயனுடைய சொல்வதினும் நன்று.

*

பயனில சொல்பவன்
பண்பினைக் கொல்பவன்

பயனில பாரித் துரைப்போன்
நயனில னாக இருப்போன்

நல்லவர் கூடப் பயனில சொன்னால்
நலங்கள் எல்லாம் நீங்கிடும் முன்னால்

பொருயூபு‘¢ சொற்கள் விரும்பி உரைப்போன்
மக்களுக்கிடையே பதராய் இருப்போன்

மறந்தும் கூடப் பயனில சொல்லார்
தெளிந்த அறிவு பெற்றுள்ள நல்லார்

பயனுள சொற்களே சொல்லுக
பயனிலாச் சொற்களைத் தள்ளுக!

## 21 தீவினையச்சம்

அஞ்சுக தீயவை, யாதும் இலையெனினும்
கொஞ்சமும் தீச்செயல் கொள்ளற்கவஞ்சமாய்த்-
தீயவை செய்வான் சிறப்படையான்,தீயசெயார்க்(கு)
ஆயவை எல்லாம் அறம்.

*

தீயவை தீய கொடுத்துவிடும்
தீயவை தீயினும் அஞ்சப்படும்

பகைவர்க்கும் தீய நினைக்காத தன்மை
அறிவினுள் எல்லாம் தலையாய நன்மை

மறந்தும் சூழற்க பிறன்கேடு
அறம்சூழும் சூழ்ந்தவர் கேடு

எப்பகை நின்றும் தப்புதல் ஒல்லும்
தீய வினைப்பகை பின்சென்று கொல்லும்

வீயாது நிழலும் அடியினைத் தொடரும்
தீயவை செய்தார்க்குக் கேடு படரும்

தேடிச் சென்று தீவினை செய்யாதான்
கேடென ஒன்று வந்து மொய்யாதான்

## 22 ஒப்புரவறிதல்

ஊறுவரி னும்கொள்க ஒப்புரவு,அப்பெருமை
வேறுல கத்தினும் மேவரிதுகூறுபுகழ்-
நல்லவன் செல்வம் நடுவூர்ப் பழமரம்போல்
எல்லார்க்கும் நன்றாம் இனிது.

*

கைமாறு வேண்டி மழை சொரிவதில்லை
மனிதனுக்கு ஏன் இந்நியதி தெரிவதில்லை?

ஊருணி யாருக்கும் தணித்திடும் தாகம்
நல்லவன் செல்வம் யாவர்க்கும் ஆகும்

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்திடில் நன்மை
நயனுடையான் திரு அதுநிகர் தன்மை

மருந்தாகித் தப்பா மரம் பிணிதீர்க்கும்
பெருந்தகை யான்திரு பயன்படும் யார்க்கும்

ஒத்த தறிவான் வாழ்பவன் ஆவான்
மற்றையான் மண்ணில் வாழ்ந்தும் சாவான்

ஒப்புரவாலே வருமெனில் கேடு
தன்னை விற்றேனும் கொளத்தகும் பீடு.

## 23 ஈகை

இல்லை எனவிரக்கும் இன்னாமை தன்னிலும்
இல்லை எனச்சொல்லல் இன்னாதேஇல்லையெனச்-
சொல்லாதே ஈயும் சுகத்தை அறிந்தவர்கள்
இல்லையெனச் சொல்லார் இசைந்து.

*

இலன் எனும் எவ்வம் உரையாவாறு
ஈவது குடிப்பிறந்தான் கொண்டிடும் வீறு

ஈகை என்பது வறியார்க் கீவது
ஈதல் செய்யான் நல்லது சாவது

இரந்தவன் இன்முகம் காட்டிடும் வரைக்கும்
இரக்கப் படுவதும் இன்னா தெரிக்கும்

ஈத்துவக்கும் இன்பம் அறியார்
உடைமை வைத்திழக்கும் வறியார்

அற்றார் அழிபசி தன்னைத் தீர்த்தல்
பின்னால் தமக்கு நற்பொருள் சேர்த்தல்

பாத்தூண் உண்ணும் பண்பு நன்று
பசிப்பிணி அவனத் தீண்டாது சென்று.

## 24 புகழ்

புகழின்றி வாழ்வில் பொருளில்லை, இங்கே
நிகழ்கின்ற கால நெளிவில்தகவோடு-
தேடும் பெருஞ்செல்வம் தேயாப் புகழேயாம்
ஈடில்லாப் பேறே இது.

*

உலகில் அழியாதது புகழ் ஒன்றே
எனவே இசைபட வாழ்தல் நன்றே

நிலவரை நீள்புகழ் ஆற்றுவார் தன்னை
புத்தேள் உலகம் போற்றிடும் முன்னை

புகழுடன் வாழாமை தன்குற்றம் ஆவது
அறியா தேனோ மற்றவரை நோவது?

தோன்றும் இடத்தில் புகழுடன் தோன்று
என்றும் போற்ற நின்புகழ் ஊன்று

வசையொழிய வாழ்வதே வாழ்வு
இசையொழிய வாழ்வது தாழ்வு

எப்படியோ வாழ்வதில் ஏதிங்கு சாரம்?
புகழ்பெற வாழாதான் பூமிக்குப் பாரம்.

## 25 அருளுடைமை

இல்லை பொருளென்றால் என்றேனும் தேடியதை
வல்லவனாய் வையத்தில் வாழலாம்இல்லை-
அருளென்றால் தேடி அடைய முடியா
இருளாகும் வாழ்வே இடர்.

*

இவ்வுலக வாழ்விற்குப் பொருளுடைமை
அவ்வுலக வாழ்விற்கு அருளுடைமை

எவ்வகையானும் அருளாள்தல் நன்று
அருளே இருளை மறைத்திடும் நின்று

மன்னுயிர் காத்து அருளாளும் போது
தன்னுயிர் அஞ்சும் வினையென்ப தேது?

ஒருகால் பூப்பர் பொருளற்றார்
ஒருநாளும் உய்யார் அருளற்றார்

தெருளாதான் கண்ட மெய்ப்பொருள் போலும்
அருளாதான் கண்ட நல்லறம் மேலும்

தன்னின் வலியார்முன் தன்னை நினை
பின்னர் மெலியார்முன் செல்ல முனை.

## 26 புலான்மறுத்தல்

கொல்லான் புலாலைக் குறையென் றொதுக்கிடுவான்
எல்லா உயிர்க்கும் இதமாவான்கொல்லூன்-
பிறிதொன்றின் புண்ணென்னும் பெற்றி உணர்ந்த
அறிவுடையார் தின்னார் அது.

*

ஊனுன்பான் அருளாள மாட்டான்
உடல்சுவை உண்பான் நல்லூக்கம் காட்டான்

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை
அருளாட்சி ஊன் தின்பார்க் கில்லை

ஒன்றின் புண்தானே ஊன்
அறிந்தும் அதைத் தின்பானேன்?

உயிரின் தலைப்பிரிந்த ஊன் உண்ணார்
மயக்கம் நீங்கிய அறிவுக் கண்ணார்

அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் நன்றே
ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை யன்றே!

ஓருயிரையும் கொல்லான் புலாலை மறுப்பான்
எல்லா உயிரும் வணங்கச் சிறப்பான்.

## 27 தவம்

நல்ல ஒழுங்கில்லார் நாடும் தவமுறையோ
பொல்லாது, மற்றதனைப் போக்கிடுகவெல்லும்-
தவம்செய்வார் தம்கருமம் செய்வார், அவருக்(கு)
உவந்தன்பு செய்தே ஒழுகு.

*

தவத்திற்கு உரு தன்துயர் பொறுத்தல்
பிறருக்குத் தீங்கு செய்வதை வெறுத்தல்

தவமுடையார்க்கே ஆகும் தவம்
அஃதில்லார் அஃதைச் செய்தல் அவம்

வேண்டிய வேண்டியாங்கு கொடுக்கும்
தவம் கூற்றினைக் கூடத் தடுக்கும்

தம்கருமம் செய்வார் தவம் செய்வார்
மற்றையார் அவாவினால் அவம் செய்வார்

துன்பம் சுடச்சுட நோற்கிற்பவர்
சுடச்சுடரும் பொன்போல் ஒளிர்கின்றவர்

தன்னுயிர் தானறப் பெற்றானைக் கண்டு
மன்னுயிர் வணங்கிச் செய்யும் தொண்டு.

## 28 கூடா ஒழுக்கம்

புறத்தே புனிதர்கள் போல்வேடம் போட்டு
மறைவஞ்சம் உட்கொள்ளும் மாந்தர்அறக்கொடியர்-
உள்ளம் பழித்த தொழிப்பின் வெளிவேடம்
கொள்ளல் எதற்கென்று கூறு?

*

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பார்த்து
பூதங்கள் ஐந்தும் அகத்தில் நகும் ஆர்த்து

நெஞ்சத்தில் அறிந்தே குற்றமுடையான்
வானுயர் தோற்றம் பெற்றும் பயனடையான்

எல்லாம் துறந்தோம் என்பவரின் தீயொழுக்கம்
எல்லோர்க்கும் ஏதம் கொடுக்கும் இழுக்கம்

புறத்திலே நல்லானாய் மனத்தில் புரையுடையான்
குன்றிமணி தலைபோல் மூக்கிற் கரியுடையான்

தோற்றம் எடுப்பாய் உட்துணிவில்லான்
புலித்தோல் போர்த்திய பசுபோல் பொல்லான்

உள்ளம் பழித்ததை ஒழித்து விட்டவன்
மழித்தல் நீட்டற் கப்பாற் பட்டவன்.

## 29 கள்ளாமை

கள்ளாமை என்னும் கடப்பாடு தன்நெஞ்சில்
தள்ளாமை கொண்டார் தகவுடையார்உள்ளத்தில்-
மற்றவ ரின்செல்வம் வவ்வுவார் என்னதான்
பெற்றாலும் இல்லையொரு பீடு.

*

எள்ளாமை வேண்டின்
கள்ளாமை வேண்டும்

நல்ல உள்ளம்
நாடாது கள்ளம்

பெருகுவது போலத் தோற்றம் கொடுத்து
களவால் வரும் பொருள் நீங்கும் கெடுத்து

களவினில் நீங்கிய உள்ளம்
விளைவினில் ஆக்கம் கொள்ளும்

அறம்தங்கும் அளவறிந்தார் நெஞ்சம்
அதுபோல் களவறிந்தார் நெஞ்சத்தில் வஞ்சம்.

களவன்றி வேறொன்றும் அறியார்
அளவல்ல செய்து வீயும் வறியார்

## 30 வாய்மை

புரைதீர்ந்த நன்மை புரிபண்பும், தீமை
வருதல் ஒழித்துணர்த்தும் மாண்பும்சரியாகத்-
தன்நெஞ் சறிவதனைத் தான்பொய்யா மாட்சிமையும்
என்றென்றும் வாய்மை இடம்.

*

தீமை இல்லாது சொல்வது வாய்மை
நன்மை தருமெனில் பொய்மையும் வாய்மை

உள்ளம் பழித்தது செய்யற்க!
தன்னெஞ்சறிவது பொய்யற்க!

நீரால் அமையும் புறத்தூய்மை
வாய்மையால் காணப்படும் அகத்தூய்மை

மனத்தொடு வாய்மை மொழிவாரின் பான்மை
தவத்தொடு தானம் செய்வாரின் மேன்மை

பொய்யாமைதான் புகழின் எல்லை
அதனினும் மிக்க அறம் வேறில்லை.

எல்லா விளக்கும் விளக்காகாது
பொய்யா விளக்குக்கு ஏதும் ஈடாகாது.

## 31 வெகுளாமை

சேர்ந்தாரைக் கொல்லும் சினம் விடுக,காய்சினத்தால்
நேர்வ தனைத்தும் நிறையிலவாம்யார்மாட்டும்-
வேண்டாம் சினம்,தீமை மேவும் நிலைவரினும்
தீண்டாது போக்க சினம்.

*

சினம் கொல்லும் நகை,உவகை
சினமே யாவற்றினும் கொடிய பகை

தன்னைத்தான் காக்கின் சினம்காத்தல் நன்று
காவாக்கால் தன்னையே வீழ்த்திடும் கொன்று

வெகுளியை மறந்தால் வாழ்வு சிறக்கும்
வெகுளியில் வீழ்ந்தால் தீய பிறக்கும்

சேர்ந்தாரைக் கொல்லும் சினம்
அதன்பால் போக்காதே மனம்

எரிப்பது போல எவர் இடர் தந்தாலும்
சினம் கொள்ளாதே நீ எக்காலும்

உள்ளத்தால் வெகுளாமை கொள்வான்
உள்ளிய எல்லாம் உடன் கொள்வான்.

## 32 இன்னா செய்யாமை

இன்னாமை செய்தார்க் கினியவே செய்துவிடின்
அன்னார் அதில்நாணி அன்புறுவார்தன்குற்றம்-
மற்றவர் குற்றம்போல் தன்மனத்தில் நோக்குதலே
குற்றம் கொணராக் குணம்.

*

சிறப்பளிக்கும் செல்வம் பெரிதும் வந்தாலும்
மாசற்றார் பிறர்க்கின்னா செய்யார் எக்காலும்

மற்றவர் தமக்கின்னா செய்தனர் என்று
அவர்க்கின்னா முயன்று செய்யாமை நன்று

ஜத்ச்‘ —ஞூடீஊ‘நுஙுஒ ஊஉ ¥€ச் கூஷஜ?
�வுநு ஓ‘அ ஓத்ச்ழவ —ஞூடீவுஇஊ .ஜ

பிறிதின் நோய் தன் நோய்போல் கருதுவான் தன்மை
அறிவினால் ஆகிடும் மிகப்பெரிய நன்மை

எங்கும் எப்பொழுதும் எவ்வகையும் யார்க்கும்
மனத்தாலும் இன்னா செய்யாமை நலம் சேர்க்கும்

மற்றவர்க்குத் தீங்கு நாம் செய்தால் முன்னால்
நமக்கும் பெருந்தீங்கு தேடிவரும் பின்னால்.

## 33 கொல்லாமை

கொல்லாமை அன்ன குணமில்லை, கொல்லாமை
நல்லா றெனக்கொள்ள நன்மையுண்டுபொல்லாத-
ஏமன் வரமுயலான், என்றென்றும் கொல்லாமை
வாமம் உடையார் வழி.

*

கொல்லாமை என்பது நல்வினை
பிறவினை அதன்பின் செல்வினை

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் நிலை
நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை

துறந்தாருக் கெல்லாம் மேம்பட்டவன்
கொலையஞ்சிக் கொல்லாமைக் காட்பட்டவன்

கொல்லாமை மேற்செல்வான் தனைநீ போற்று
அவன்மேல் செல்லாது உயிருண்ணும் கூற்று

தன்னுயிர் நீக்கிடும் நிலைவந்த போதும்
பிறிதுயிர் நீக்குதல் கூடாதெப்போதும்.

கொல்வதால் வருகிற ஆக்கம் கடை
ஆகையால் கொல்வதற்குப் போடு தடை.

## 34 நிலையாமை

ஓர்நொடிக்கு மேலும் உயிர்வாழ்வோ மாவென்றே
தேர்கிலார் கோடிபல சிந்திப்பார்பார்மிசை-
நாச்செற்று விக்கல் நமைவாட்டும் முன்நன்மை
மேற்சென்று செய்க வினை.

*

நில்லாதன வற்றை நிலையின என்றே
உணர்வார் கடையினும் கடையர் அன்றே

ஆடரங்கில் சூழுவார்போல செல்வம் ஓங்கும்
ஆடல்முடிய நீங்குவார்போல் அது நீங்கும்

நிலையாத செல்வம் வந்துற்ற போது
உலையாத நல்லறம் உடன்செய்க அப்போது

கழிகின்ற பொழுதாகக் காட்டிடும் நாள்
நன்குணர்க, நம் உயிரை ஈரும் வாள்

நாச்செற்று விக்கல் வந்துழற்றும் முன்னே
நல்லறங்கள் முன்வந்து தான்செய்க இன்னே

உறங்குவது போலும் இறப்பு
உறங்கி விழிப்பது போலும் பிறப்பு.

## 35 துறவு

யானென தென்னும் அகந்தை அகற்றிவிடின்
வானிற் குயர்ந்த வரிசைவரும்தானொருவன்-
பற்று விடப்பிறப்புப் பற்றாது, பற்றுவிடப்
பற்றுக பற்றற்றான் பற்று

*

துறந்தபின் வருகின்ற இன்பங்கள் உண்டு
அவைவேண்டின் துறந்திடுக நெஞ்சில் கொண்டு

ஐந்தன் புலத்தைக் கெடுத்தல் வேண்டும்
அவை நுகரத் தொகுத்தவற்றை விடுத்தல் வேண்டும்

ஒன்றும் இன்மை துறவின் தன்மை
உடமை அதனை மயக்கிடும் புன்மை

பிறப்பறுக்க உற்றார்க்கு உடம்பும் மிகை
மற்றும் தொடர்பாடு ஏன் கொள்ளுகை?

பற்றினைப் பற்றித் திடமாய்த் தொடர்வார்
இடும்பைகள் பற்ற அல்லற் படுவார்

பற்றற்றான் பற்றினைப் பற்றுக
அப்பற்றைப் பற்றுவிடற்குப் பற்றுக!

## 36 மெய்யுணர்தல்

மெய்யுணர்வு கொண்டார்க்கு மீண்டும் பிறப்பில்லை
வையத்தின் வானம் மருங்காகும்ஐயுணர்வு-
எய்திய போதிலும் ஏதும் பயனில்லை
மெய்யுணர்வு இல்லா விடின்.

*

மெய்ப்பொருள் அல்லதை மெய்ப்பொருளாக
உணர்வார் பெறுவார் பிறவி பலவாக

ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு இங்கு
வையத்தின் வானம் இன்னும் மருங்கு

ஐயுணர்வு ஒருவன் எய்திய போதும்
மெய்யுணர்வு இன்றேல் இல்லைபயன் ஏதும்

எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காணல் அறிவெனும் செம்பொருள்

கற்றீண்டு மெய்ப்பொருள் செந்நெறி கண்டார்
பிறப்புற்று வாரா நெறி தலைக்கொண்டார்

பொருட்களின் சார்பால் செம்பொருள் தேர்ந்து
ஒழுகக் கெடும்வினைப் பயன்நோய் தீர்ந்து.

## 37 அவாவறுத்தல்

அற்றவர் என்போர் அவாவற்றோர், உள்ளத்தில்
உற்ற அவா வால்துன்பம் ஓங்கிவரும்எற்றைக்கும்-
வேண்டின் பிறவாமை வேண்டுக,வேண்டியதை
வேண்டாமை உய்த்து விடும்.

*

ஒருவன் குவிக்கும் அவாவெனும் சொத்து
மறுபடி மறுபடி பிறப்பீனும் வித்து

வேண்டின் கேட்க பிறவாமை எனும் வரம்
அஃதும் வேண்டாமை வேண்டவரும்

வேண்டாமைக் கீடு வேண்டாமை ஒன்றே
அவாவற் றார்க்குத் துன்பம் இல்லாதாகும் அன்றே

அற்றவ ரெல்லாம் இல்லை அற்றவர்
அவாவற்றவரே அந்நிலை உற்றவர்

அவாவென்னும் துன்பத்துள் துன்பம் போக்குக
அதனால் இன்பம் இடையறாது தேக்குக!

ஆரா இயற்கை அவாவைத் தொலை
அதுதரும் பேரா இயற்கை நிலை.

## 38 ஊழ்

தள்ளினும் போகாது, தான்வேண்டிப் போற்றியே
கொள்ள முயன்றாலும் கூடாதுஉள்ளாகூழ் -
வாழவைக்கும், போகூழ் வழுக்கிவிடும், உண்டோசொல்
ஊழின் வலிக்குமிக் கொன்று?

*

ஆகூழால் நன்முயற்சி தோன்றும்
போகூழால் சோம்பல் வாழ்வில் ஊன்றும்

அறிவுடையாரையும் முட்டாளாக்கும் போகூழ்
அறிவற்றவரையும் அறிஞராய்த் தோற்றும் ஆகூழ்

ஊழ்வயத்தால் தானே செல்வம் வருமாம்
நல்லவை தீயவாம், தீயவை நல்லவாம்

சேர்வன ஒதுக்கினும் வந்து சேரும்
சேராதன வேண்டினும் வாராது தீரும்

வகுத்தான் வகுத்த வகையே பெரிது
கோடி கொடுத்தாலும் அதை மாற்றல் அரிது

ஊழிற் பெருவலி வேறிலை ஒன்று
எது சூழினும் ,அறிக, அது முந்துறும் என்று.

## 39 இறைமாட்சி

செங்கோல் முறைசெய்து, சேரும் அறம்காத்து
தங்கும் எளிமைத் தகைசான்றுமங்காத-
செல்வங்கள் சேர்த்துச் சிறப்பாகப் பங்கிட்டு
நல்கும் அரசவையே நாடு.

*

படைகுடி கூழ் அமைச்சு நட்பரண் எனும் ஆறு
உடையவன் தானே அரசருள் ஏறு

அஞ்சாமை ஈகை அறிவூக்கம்
அரசற்கு என்றும் நிலை ஆக்கம்

விரைந்து செயலாற்றல், கல்வி, துணிவுடைமை
நீங்காது கொள்வது அரசர் கடமை

அல்லவை நீக்கி அறனிழுக்கா ஞானம்
பெற்றுடன் கொள்க மறனிழுக்கா மானம்

இன்சொலன்,எளியன்,முறைசெய்வான் என்றே
போற்றிட அரசன் ஆளுதல் நன்றே!

கசப்பான சொற்களையும் கேட்டுப் பொறுப்பான்
ஆட்சியை உலகம் விரும்பச் சிறப்பான்.

## 40 கல்வி

கண்ணாகி, வாழ்க்கைக் கதியாகி, யாவர்க்கும்
திண்ணம் உடைய திருவாகிநண்ணுகிற -
கல்வியைக் குற்றமறக் கற்றிடுக, நின்றிடுக
சொல்கற்ற வண்ணம் தொடர்ந்து.

*

கற்பவை கசடறக் கற்க
கற்றபின் அதற்குத் தக நிற்க!

எண்ணும் எழுத்தும் கண்
கல்லார்க்குக் கண்ணிரண்டும் புண்

செல்வர்முன் இரப்பான் எப்படில்லாதான் இ
ஆசிரியர்முன் கல்வி கேட்க அப்படி.

மணற்கேணி தோண்டத் தோண்ட ஊறும்
மாந்தர்க்குக் கற்கக் கற்க அறிவு ஏறும்

கேடில் விழுச்செல்வம் கல்வி எனும் செல்வம்
மற்றவை எல்லாம் பெயருக்குச் செல்வம்

தாமின்புறுவது உலகு இன்புறக் கண்டு
கற்றறிந்தார் திளைப்பர் அகமகிழ்வு கொண்டு.

## 41 கல்லாமை

நன்றெனினும் கல்லாதார் நல்கும் மொழியெதுவும்
என்றும் அவையினிலே ஏறாதுநன்றாகக்-
கல்லாத மாந்தர் களரனையர், மேம்போக்காய்
எல்லாம் இருந்தும் இலர்.

*

நல்லவர் ஆவார் கல்லாதவர்
கற்றார்முன் ஏதும் சொல்லாதவர்

ஓரோர்வழி நன்று சொல்வான் கல்லாதவன்
ஆயினும் மதிப்பில் அவன் செல்லாதவன்

தானுயர்ந்தோன் எனும் கல்லாதவன் எண்ணம்
கற்றார்முன் பேச வீழ்ந்திடும் திண்ணம்

கல்லார் உளர் எனச் சொலப்படுதல் அன்றி
களரென அமைவர் தன்செயல் குன்றி

கொடிது கொடிது நல்லார்கண் பட்ட வறுமை
அதனினும் கொடிது கல்லார்கண் உற்ற வெறுமை

கற்றாரோடு கல்லாரின் வைப்பு
விலங்கொடு மக்களை வைப்பதற் கொப்பு.

## 42 கேள்வி

செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம், அச்செல்வம்
நல்குரவும் தோன்றா நலமீயும்மெல்லுகிற-
வாயுணவைக் கூட மறக்கடிக்கும்,தந்திடுமே
போயெங்கும் பேசும் புகழ்.

*

செல்வத்துள் செவிச் செல்வம் தலை
அச்செல்வம் பெற்றார்க் கீடே இலை

செவிக்குண வில்லாத போது
வயிற்றுக் குணவைச் சிந்திப்போம் அப்போது

எனைத்தாலும் கேட்கின்ற நல்லன
அனைத்தாலும் பெருமை தர வல்லன.

மயங்கினராயினும் பேதைமை சொல்லார்
ஆய்ந்தறிந்த கேள்வியின் வல்லார்.

கேள்வியால் துளைக்கப்படாத காது
கேட்பினும் கேட்டதாகாது

செவிச்சுவை உணரார் வாழ்கிறார் தின்ன
அவர் இருந்தும் என்ன இறந்தும் என்ன?

## 43 அறிவுடைமை

உலகத்தோ டொன்றி உறுபொருள் காத்து
பலகற்ற போதும் பகுத்துநிலைபெற்ற-
நல்லறிவைப் பெற்றவர்க்கு நண்ணும் இடரில்லை
எல்லாம் பெறுவார் இனிது.

*

இறுதி வாராமல் காக்கும் அறிவு
பகைவரால் அழிக்க ஒண்ணாச் செறிவு

மனத்தை அடக்கி நெறியில் விடுக்கும்
நன்றிடை உய்த்து ஞானம் கொடுக்கும்

யார்யார் எதைச் சொலக்கேட்டாலும்
அப்பொருள் மெய்ப்பொருள் காணும் எக்காலும்

சொல்லுவ எளிதாய்ப் புரியச் சொல்லும்
பிறர் சொல்லில் நுண்பொருள் கண்டு வெல்லும்

உலக ஒழுக்கம் தான் கடைபிடிக்கும்
ஆவது அறிந்து ஏற்ப நடக்கும்

அறிவுடையார்க் கில்லை என்பதே இல்லை
அறிவிலார்க் கெல்லாம் இருந்தும் இல்லை.

## 44 குற்றம் கடிதல்

இம்மி அளவை இமயமாய்த் தானெண்ணித்
தம்குற்றம் நாணும் தகைமையொடுதம்மிடத்தே-
உள்ள பிழைநீக்கி ஊரார் பிழைகாணல்
கொள்ளற் குரிய குணம்.

*

செருக்கும் சிறுமையும் சினமும் நீங்கி
வாழ்வோர் செல்வம் மதிப்புறும் ஓங்கி

கஞ்சத்தனம், கழிபேருவகை
மாண்பில் மானம் இவை அரசர்க்குப் பகை

திணைத்துணைக் குற்றம் வந்திடும் போதும்
பணைத்துணையாய்க் கருதுக எப்போதும்

எரிமுன்னர் வைக்கோல் பற்றி எரியும்
வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை சரியும்

தன்குற்றம் நீக்கிப் பிறர் குற்றம் பார்க்கும்
தன்மை குற்றமில் நிலையைச் சேர்க்கும்

செய்யத் தக்கவை செய்யாமல், காக்கும்
செல்வம், உயர்வை நல்காது போக்கும்.

## 45 பெரியாரைத் துணைக்கோடல்

குற்றம் கடிந்து குணங்காட்ட வல்லாரை
உற்ற துணையாய் உடன்கொள்களற்றாலும்-
நல்லார் தொடர்பதனை நாடிப் பிடிப்பதுவே
வல்லமை கொள்ளும் வகை.

*

நீதி நெறியறிந்து மூத்த அறிவுடையோர் தம்மை
திறனறிந்த மன்னர் சேர்வது செம்மை.

உற்ற தீங்கு போக்கி உறாமை முற்காக்கும்
பெரியாரைப் பேணிக் கொளல் நலம் சேர்க்கும்

பெரியோர்கள் நலம் பேணுவது பெரிது
அரியவற்றுள் அதுவே அரிது.

இடிக்கும் துணையை உடையவர் யாரே
கெடுக்கும் பகையால் அவர் அழியாரே!

இடிப்பாரின் கேண்மை எவன் விடுவான்
அவன் கெடுப்பாரின்றித் தானே கெடுவான்

முதலீடு இல்லார்க்கு வருவாய் இல்லை
பெரியோர் துணையில்லார்க்கு நிலையில்லை

## 46 சிற்றினம் சேராமை

மனநலம் மன்னுயிர்க் காக்கம், கொள்ளும்
இனநலம் வெற்றிக்எனவேதான்-இடமாம் (கு)
சிற்றினம் அஞ்சிச் சிறப்புடைய நல்லினத்தைப்
பற்றுக, கொள்க பயன்.

*

பெரியர் சிற்றினம் அஞ்சி வாழ்வர்
சிறியர் அதனைச் சுற்றமாய்ச் சூழ்வர்

நிலத்தின் இயல்பால் நீரும் திரியும்
இனத்தின் இயல்பால் மாந்தரறிவு திரியும்

மனம் தூய்மை செய்வினை தூய்மை
இரண்டுக்கும் பற்றுக்கோடு இனம் தூய்மை

மன நலத்தால் மன்னுயிர்க் காக்கம் வரும்
இன நலம் எல்லாப் புகழும் தரும்

மன நலம் அமையினும் இன நலம் காப்பு
மறுமை இன்பத்துக்கு அதுவே ஏமாப்பு

நல்லினத்தினும் துணை வேறில்லை
தீயினத்தினும் வேறில்லை தொல்லை.

## 47 தெரிந்து செயல்வகை

நண்ணும் கருமங்கள் நல்கும் பலனதனை
எண்ணிச் செயலில் இறங்குகஎண்ணாதே-
ஆற்றும் செயல் யாவும் ஆட்கள் பலர்கூடிப்
போற்றினும் வீணாகப் போம்

*

ஆவதுவும் போவதுவும்,வருவதுவும் பின்னால்
ஆய்ந்து செய்க செயல் முன்னால்

தேர்ந்தறிந்த அறிஞருடன் ஆய்ந்து செயலாற்று
அதுதானே அரும்பொருள் பொங்கிவரும் ஊற்று.

எல்லா வகையும் எண்ணா தெழுதல்
பகைவர் வழியில் சென்றே விழுதல்

செய்யத் தகாதவை செய்வதால் கெடும்
செய்யத்தக்கவை செய்யாமையால் கெடும்

திட்டமிட்டு முயன்று செய்யும் செயல் எழும்
அல்லவை பலர் முட்டுக் கொடுத்தாலும் விழும்

பாத்திரம் அறிந்து உதவுதல் நன்று
அவ்வண்ணம் செய்யாமை தவறான ஒன்று.

## 48 வலியறிதல்

உள்ள வலிதூக்கி , ஒன்னார் திறம்தூக்கிக்
கொள்ளும் செயலே குறிசேரும்உள்ளதுவும்-
கொஞ்சமே ஆனாலும் கூடும் வலிதேர்ந்தால்
எஞ்ஞான்றும் துன்பமே இல்.

*

வினத்திறனும் தன்திறனும், பகைத்திறனும் இன்னும்
துணைத்திறனும் ஆய்ந்தால் எதுவேண்டும் பின்னும்?

தன்வலிமை தேறாது வினைமுயல்தல் தீது
அளவுக்கும் மேல் தன்னை வியந்தால் பயன் ஏது?

மயிலின் தோகை மிகவும் மென்மையானது
அதிகம் ஏற்றினால் அச்சை முறிக்கும் வன்மையானது

மரத்தின் உச்சிக்கு மேலும் போவார்
வழியே இன்றிக் கீழே வீழ்வார்

உள்ளதறிந்து ஈதல் நன்று
அதுதான் பொருளைப் போற்றிக் காக்கும் ஒன்று.

பொருள்வரும் அளவு சிறிதெனினும் கேடில்லை
வழி மீறினால் கேடுவரும், மற்றைப் பாடில்லை.

## 49 காலமறிதல்

காலம் அறிந்து கருதியது செய்தக்கால்
ஞாலமும் வேண்டின் நமக்காகும்மேலும்-
வரும்வரையில் உள்வேர்த்து வந்தவுடன் பற்றல்
திருவை நிறுத்தும் திறம்.

*

கூகையைக் காக்கை பகலில் வெல்லும்
காலம் அறிந்தால் வெற்றி நமைத்தேடிச் செல்லும்

செய்ய இயலாத ஒன்று இங்கு ஏது
கருவிகளோடு காலம் அறிந்aaது செய்யும் போது!

காலமும் இடமும் கருதிச் செய்பவர்
ஞாலம் கருதினும் நன்று எய்துவர்

பின்னோக்கிச் சென்று முன்பாயும் ஆடு
ஒடுங்கிப்பின் பாய்பவன் ஆளுவான் நாடு

பகை மிகை செயினும் சினம் வெளியில் காட்டார்
காலம் வந்ததும் பகை தலைதூக்க விடமாட்டார்

எய்தற்கு அரிய கிட்டும் நிலைவரும் போது
செய்தற்கு அரிய செய்ய வெற்றி தப்பாது

## 50 இடனறிதல்

தம்மின் மெலியார்முன் தாம்தோற்பர், வாய்த்தவிடச்
செம்மை அறியாத் திறமுடையார்தம்முள்ளே-
அஞ்சாமை என்னும் அருமருந்தே வெற்றிதரும்
விஞ்சுமிடம் தேர்ந்து விடின்.

*

இடமறிந்து மேற்செலும் மெலியர்
தமைக்கண்டு போரிட அஞ்சுவர் வலியர்

புனலில் இருந்தால் முதலை வெல்லும்
புனலின் நீங்கின் பிற அதனைக் கொல்லும்

நிலத்தில் விரைந்தோடும் தேர் கடலில் ஓடாது
கடலில் ஓடும் படகு நிலத்தில் ஓடாது

இடமறிந்து செயல்மேல் செல்லுவான்
அஞ்சாமை ஒன்றே துணைபோதும்,வெல்லுவான்

அவரவர் இருப்பிடம் காப்பிற் பெரியது
இலை எதுவெனினும் பகைவர் தாக்கற்கரியது

அடக்கவொண்ணா அடுமத வேழம்
களரில் சிக்கினால் நரி தாக்க வீழும்.

## 51 தெரிந்து தெளிதல்

எல்லாம் அறிந்தவர் இங்கில்லை,அல்லதுவும்
நல்லதுவும் தூக்கி நலமறிகவல்லமையைத்-
தேரா தெடுத்தல் சிறுமை,தெரிந்தபின்னே
தீராத ஐயமோ தீது.

*

குற்றம் செய்ய அஞ்சுபவனா என ஓர்ந்து
ஒருவனைப் பதவியில் அமர்த்துக தேர்ந்து.

துறைபோகிய அறிஞர்கள் பாலும்
ஆராய்ந்தால் உண்டு அறியாமை மேலும்

குற்றம் நாடி, குணமும் நாடி
அவற்றுள் மிக்க நாடித் தேர்க தேடி

ஒருவர் பெருமை சிறுமை அறியும் உரைகல் எது?
அவரவர் கருமம் என்பதே அது.

தனக்கு அன்பன் என்பதால் அறியாதாரைத்
தேர்தல், அறுத்திடும் அறிவின் வேரை.

ஆராயாமல் எவரையும் தெளிதல் ஆகாது.
தெளிந்தபின் சந்தேகித்தல் தீது.

## 52 தெரிந்து வினையாடல்

இதனை இதனால் இவன்முடிப்பான் என்றாய்ந்து
அதனை அவன்கண் அடைத்தேபதவி-
உரிமை உடையோர்க் குறுதகுதி கூட்டிப்
பெருமை கொடுத்திடுக பின்.

*

பொருள்வரும் வழிபெருக்கி வளம்படுத்து
தடை நீக்கி வினைசெய்வான்பால் விடுக அடுத்து

அன்பு,அறிவு கலங்காமை,அவாவின்மை
நான்கும் அமைந்தானை வினைக்கமர்த்தல் நன்மை

அன்புக்குரியன் என்று,தேறாமல் சென்று
வினை ஒப்படைத்தல் ஏற்புடைத்தன்று

இதனை இதனால் இவன் முடிப்பான் என்று
ஆய்ந்து அதனை அவன்கண் விடல் நன்று

உரிமையால் வினைக்குத் தேர்வு செய்தபின்னர்
அதற்குத் தகுதியுடையானாய் ஆக்குக முன்னர்

வினைசெய்வான் கோடானெனின் உலகு கோடாது
நாடோறும் மன்னன் இதை ஆய்ந்திடுக வாடாது.

## 53 சுற்றந்தழால்

நீங்காத சுற்றம் நிறைய உடையார்க்குத்
தீங்காக ஏதொன்றும் சேராதுபாங்காகத்-
தன்னன்பால்,கொண்ட தராதரத்தால், தேர்ந்துவிடின்
என்னென்ன இல்லை இனி ?

*

வறுமை எய்தியதால் மற்றையோர் தாங்காத போது
பழமையை எண்ணி சுற்றந்தான் பற்றும் அப்போது

அன்பு அறாத சுற்றத்தாலே
ஆக்கம் அறாது பெருகும் மேன்மேலே

சுற்றம் சூழும் வாழ்வு உற்றவன்
தனது செல்வப் பயனைப் பெற்றவன்

ஈகைப் பண்பும் இன்சொல்லும் எவன்பால் உண்டு
அவனைச் சூழும் சுற்றம் மொய்த்துக் கொண்டு

கொடையில் வல்லான் கோபம் இல்லான்
சுற்றம் அவனைச் சூழவாழ் நல்லான்

சுற்றத்தை அழைத்தே உண்ணும் காக்கை
அப்படி வாழ்ந்தால் சிறக்கும் வாழ்க்கை.

## 54 பொச்சாவாமை

மறதி இலாருக்கு வாழ்வினிலே நல்ல
உறுதிமுன்னே ஓடிவரும்,உண்மைஇறந்த-
மகிழ்ச்சியில் கொள்ளும் மறதி, கொண்ட
புகழினைக் கொல்லும் புலி.

*

அதிகக் கோபம் கொள்ளல் தீது
மகிழ்ச்சியில் மறதி அதனினும் தீது

கொடிய வறுமை அறிவைக் கெடுக்கும்
மறதி புகழை வீழ்த்தி யடிக்கும்

அச்சம் உடையவர்க்குப் பாதுகாப்பில்லை
மறதி யுடையவர்க்கு அதுவே தொல்லை.

மறதியால் வருவது மாபெரும் தீது
மறதியை மறந்தால் அரியது ஏது?

மறவாது செய்க நெறிமுறை காத்து
மறந்தால் எழுமையும் நன்மை ஏகும் நீத்து.

எண்ணிய எண்ணியாங்கு கிட்டும்
எண்ணியதை நெஞ்சில் மறவாத மட்டும்.

## 55 செங்கோன்மை

ஓர்பக்கம் சாயாமல் உற்ற முறையாய்ந்து
žர்தூக்கிச் செய்கின்ற செங்கோன்மைதார்வேந்தன்-
தன்னையும் காத்து, சகல குடிகட்கும்
நன்மையை நல்கும் நலம்.

*

செங்கோல் என்றும் ஓர்பக்கம் சாயாது
எந்தச் செயலும் ஆயாமல் செய்யாது

உலகெல்லாம் வாழும் வான்பார்த்து
குடிகள் வாழும் மன்னன் கோல் பார்த்து

மன்னன் செங்கோல் குடிகளை அணைக்கும்
அவன் அடியில் உலகும் தனைப் பிணைக்கும்

மழையும் வினையுளும் குறையாத நாடு
செங்கோல் மன்னன் ஆளும் நாடு

வேலா இறைக்கு வெற்றி கொடுக்கும்?
கோடாச் செங்கோலால் அது கிடைக்கும்

களைகளைந்து பயிர்காத்தல் வேண்டும்
கொடியாரை மன்னன் தண்டிக்க வேண்டும்.

## 56 கொடுங்கோன்மை

குணமில் கொடுங்கோன்மை கொண்ட அரசன்
பிணியாவான்,கேடு பெருகும்அணிகள்சேர்-
செல்வம் உடைமையும் தீங்காகும்,துன்பங்கள்
பல்கும் அந் நாடென்றும் பாழ்.

*

கொலைஞரில் தீயன் கொடுங்கோலன்,
அவனே நாட்டை அழிக்கும் காலன்

வழிப்பறி செய்வான் ஆறலை திருடன்
வரிப்பறி செய்வான் கொடுங்கோல் முரடன்

மக்கள் வடிக்கும் கண்ர் அருவி
மன்னன் செல்வம் அழிக்கும் கருவி

செங்கோல் மன்னவன் புகழ் நிலைக்கும்
கொடுங்கோன்மை புகழை அழித்துக் குலைக்கும்

கொடுங்கோல் நாட்டில் வாழும் கடமை
கொண்டோர்க் கின்மையின் இன்னாது உடைமை.

எந்நாட்டில் வேந்து முறை தவறும்
அந்நாட்டில் அறம் தவறும்,மழை தவறும்.

## 57 வெருவந்த செய்யாமை

ஏற்றவகை ஆய்ந்தே எறிவதுபோல் மெல்லோச்சும்
ஆற்றல் அரசர்க் கணியாகும்மாற்றியதைக-்
கண்ணோடாக் கண்ணும் கடும்சொல்லும் கொள்வேந்தர்
புண்ணோட்டம் கொண்ட புரை.

*

நடுவாய்ந்து மீண்டும் பிழை செய்யாவாறு
குற்றவாளியைத் தண்டிப்பதே முறைசெய்யும் ஆறு

அதிகமாய்த் தண்டிப்பதுபோல் தோற்றி
மெல்லத் தண்டிப்பவனை ஆக்கம் நீங்காது போற்றி

குடிகள் வெறுக்கும் செயல்களைப் புரிந்திடும்
அரசு நிச்சயம் விரைந்து கெடும்

ஒட்டாமை, கடுகடுப்பு ஓங்கும்
மன்னன்பால் நிலையாது செல்வம் நீங்கும்

அளவிறந்து தண்டனை தந்து ஒறுக்கும்
அரசனை அத்தண்டமே அரமாய் அறுக்கும்

கொடுங்கோலன் நிற்பான் கல்லாதார் ஓரம்
அவர்களே இந்நிலத்துக்குப் பாரம்

## 58 கண்ணோட்டம்

கண்ணிற் கணிகலன் கண்ணோட்டம், அஃதில்லார்
மண்ணோ டிணைந்த மரத்தனையர்கண்ணோடும்-
நல்லார், பெயக்கண்டும் நஞ்சுண்பார்,மண்ணுலகில்
வல்லார் எனப்படு வார்.

*

கண்ணோட்டம் மாந்தர் வாழ்விலோர் சாரம்
அஃதில்லார் நிலத்துக்கு வெறும் பாரம்

பாடற் கியைபின்றேல் என்னாகும் பண்?
கண்ணோட்டம் இன்றேல் என்னாகும் கண்?

கண் முகத்தில் உள உறுப்பு
கண்ணோட்டம் இன்றேல் அதற்கென்ன சிறப்பு?

கண்ணோட்டம் இல்லாத கண் புண்
கண்ணோட வல்லார்க்கு உரியதிம் மண்

நெறியோடு கண்ணோடல் முறை
அதுசெய்யான் ஒழுக்கத்தில் விழுந்திடும் கறை

நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்
பெயக்கண்டும் நஞ்சுண்ணுவர்.

## 59 ஒற்றாடல்

தன்னவரோ, உற்றவரோ,சார்ந்தவரோ யாரெனினும்
அன்னவரை ஒற்றாய்தல் ஆகுமேமன்னவரின்-
ஒற்றுக்கு வேண்டும் உலையா உறுதியுளம்
ஒற்றுக்கும் வேண்டுமற் றொற்று.

*

யாவர்க்கும் எஞ்ஞான்றும் நிகழ்வன யாவும்
ஒற்றறிதல் வேந்தன் தொழிலென மேவும்

ஐயுறா உருவும் அஞ்சாத் துணிவும் உற்று
யாண்டும் இரகசியம் காப்பான் ஒற்று

சோர்விலான், வேடத்தில் வல்லான்
என்ன நேரினும் மறைப்பதைச் சொல்லான்

அறிந்தவை ஐயப்படாதது ஒற்று
மறைந்தவை அறியாது கேட்கவல்லது ஒற்று

ஒற்றொற்றித் தந்த பொருள் தம்மை
மற்றோர் ஒற்றினால் ஒற்றிக் கொளல் செம்மை

ஒற்றினை ஒற்று அறியா வண்ணம்
உடன்மூவர் ஒற்றியவை கொளல் வேண்டும் திண்ணம்

## 60 ஊக்கமுடைமை

ஊக்கம் உடையானை ஒருபோதும் நீங்காதே
ஆக்கம் வழிகேட் டருகிருக்கும்ஊக்கம்-
உடைமை உடைமை, உளத்தின் உயர்வுத்
திடமே எவர்க்கும் திரு.

*

ஊக்கம் உடையர் உடையர்
அஃதிலார் உடையரேனும் இல்லை உடையர்

பொருளுடைமை என்றேனும் நீங்கும்
ஊக்கமுடைமை என்றும் ஓங்கும்

ஊக்கம் மனம் விட்டுப் போகாதார்
இழந்தும் இழந்தோராய் ஆகாதார்

அசைவிலா ஊக்கம் உடையவன் மாட்டு
ஆக்கம் செல்லும் வழியினைக் கேட்டு.

எண்ணுக உயர்வு
இலையெனில் அயர்வு

சிதைவு வரினும் ஊக்கமுளார் தளரார்
ஊக்கமிலார் தன்நிலையில் வளரார்.

## 61 மடியின்மை

சோம்பல் உடையவர் சூழ்ந்த குடிகெடுப்பர்
கூம்பி வளங்கள் குலைத்திடுவர்சோம்பலொடு-
காலம் கடத்தல், மறதி துயில் ஆகியவை
காலன்பால் செல்வோர் கலம்.

*

மடியை மடித்து வீசு
இலையேல் குடியைக் கெடுக்குமம் மாசு

சோம்பலை விடுக
இல்லையேல் கெடுக

மடி,தளர்ச்சி, மறதி, தூக்கம்
இறக்குமுன் செல்லும் மரக்கலம் சேர்க்கும்

அரசின் ஆதரவு இருந்த போதும்
மடியுடையார் எய்தார் மாண்பயன் ஏதும்

மடியைப் பொருளாய் வேட்பார்
இடிபுரிந்து எள்ளும் சொல் கேட்பார்

பிறவழி வந்த எந்தக் குறையும்
மடிவழி சேரா மாண்பால் மறையும்

## 62. ஆள்வினையுடைமை

இயலுமா,ஊழோ எனவெண்ணி டாமல்
முயலுதல் வெற்றிக்கு மூலம்அயராத-
ஆள்வினை தெய்வத்தால் ஆகாததைக் கூடத்
தாள்சேர்க்கும் ஆக்கம் தரும்.

*

கடினம் என்று கொள்ளற்க தளர்ச்சி
முயற்சி என்றும் தருமே வளர்ச்சி

முயற்சியால் வளத்தைப் பெருக்கு
அதுதரும் உதவுவம் என்னும் செருக்கு

முயற்சி திருவினை ஆக்கும்
முயற்றின்மை இன்மை தேக்கும்

வினைசெய்வான்பால் திருமகள் இருப்பாள்
அஃதிலான் வீட்டில் மூதேவி படுக்கை விரிப்பாள்

ஆகூழ் இல்லாமை பழியன்று
முயற்சியில்லாமையைச் சொல்வர் பழியென்று.

தெய்வம் உதவும் விதியிலாப் போதும்
மெய்வருத்தம் நிச்சயம் கூலிதரும் எப்போதும்.

## 63 இடுக்கண் அழியாமை

எத்துணைதான் துன்பம் எதிர்வரினும் அஃதியல்பாய்
ஒத்த மனமுடையான் ஓங்கிடுவான்மெத்த-
இடும்பைக் கிடும்பை படுப்பான், அவனுக்கு
இடுக்கண் எனவேதும் இல்.

*

இடுக்கண் வருங்கால் சிரிப்பது நன்று
அடுப்பது அதனினும் கடுமையதன்று

துன்பத்தைத் துன்பப் படுத்துவர்
துன்பத்தில் துன்பப் படாதவர்

எத்துணைத் துன்பம் எதிர் வந்த போதும்
கலங்காதான் துன்பம் கலங்கும் எப்போதும்

இன்பத்தில் எவன் இன்புறான்
துன்பத்தில் அவன் துன்புறான்

இன்பம் விழையாதான்
துன்பில் அழியாதான்

வினைக்கண் வரும் துன்பம் இன்பமென அறிவான்
பகைவரும் போற்றும் சிறப்பைப் பெறுவான்

## 64 அமைச்சு

காலம், குடிகாத்தல் கற்றறி தல்கருவி
žலமுயர் செய்கையரு செய்வினைமேலுமிங்கே-
ஆள்வினையும் கொண்ட அமைச்சன் மதிநுட்பம்
வாள்வினையின் மேலாம் வலி.

*

கருவி,காலம் செய்கை,உபாயம் அருவினை
இவ்வைந்தும் அமைச்சருக்கு வருவினை

கொண்டது விடாமை, குடிகாத்தல், கற்றறிவு
ஆள்வினை அமைச்சருக்கு இருத்தல் நிறைவு

பிரித்து, பேணி,பிரித்தாரைக் கூட்ட வல்லான்
அமைச்சுப் பண்புகள் கொண்ட நல்லான்

சொல்வல்லான், திறனறிவான்,அறந்தெரிவான்
நல்ல அமைச்சராய்த் துணைபுரிவான்

நூலறிவும் நுண்ணறிவும் உடையான்
அதிநுட்பச் சூழ்ச்சியினால் பின்னடையான்

அரசன் தான் தேரான் ,கேளான் என்றாலும்
நல்லமைச்சன் உறுதி பகர்வான் எக்காலும்.

## 65 சொல்வன்மை

திறனறிந்து,சொல்லின் திறமறிந்து,வெல்லும்
பிறசொல் இலையெனும் பீடுமுறையறிந்து-
சோர்வின்றி அஞ்சாமல் சொல்லும் நலத்தோரை
மார்தட்டிப் போற்றுமிம் மண்.

*

ஆக்கமும் கேடும் சொல்லால் வரும்
சொல்லில் சோர்தல் கேடு தரும்

திறனறிந்து சொல்லைச் சொல்லுக
கேட்பவர் விரும்பச் சொல்லி வெல்லுக

சொல்லுக சொல்லைச் செறிந்து
அச்சொல்லை வெல்லும் சொல் இன்மை அறிந்து

தான்சொல்கையில் பிறர் விரும்பச் சொல்லுக
பிறர் சொலக் கேட்கையில் பயன் கொள்ளுக

சொலல்வல்லான், சோர்விலான் அஞ்சான்
அவனை எந்தப் பகைவனும் விஞ்சான்

கற்றுணர்ந்தும் விரித்துரைக்கும் திறனற்றவன்
மலர்ந்தும் மணம் வீசா மலரை ஒத்தவன்

## 66 வினைத்தூய்மை

அல்வழிப் பெற்ற அரும்பொருளால் யாதுபயன்
தொல்லை கொடுத்துத் தொலைந்துபோம்நல்ல -
வினத்தூய்மை தானெவர்க்கும் மேன்மை தரும், மற்ற
அனைத்தும் துயரென் றறி.

*

ஆக்கம் தரும் துணைநலம்
எல்லாம் தரும் வினைநலம்

புகழொடு நன்மை தராத வினை
செய்யாதிருக்க என்றும் நினை.

ஏன்செய்தோம் என்று
இரங்கும் வினை செய்யாமை நன்று.

தாயே பசித்திருக்கும் போதும்
சான்றோர் பழிக்கும் வினை செய்யாதே ஏதும்.

பழியால் முயன்ற பொருள் வரவு
கொள்வதில் சிறந்தது நல்குரவு

அழவைத்துப் பெற்றவை அழவைத்துப் போகும்
இழப்பினும் நல்லவை பின் பயனுள்ளவாகும்

## 67 வினைத்திட்பம்

எண்ணிய எண்ணியாங்கு எய்தலாம், எண்ணியர்
திண்ணிய ராய்ச்செயல் செய்தக்கால்எண்ணியதைச்-
செய்திடும் முன்னே தெரியப் பறைசாற்றல்
செய்கைக்கோர் ஊறாம் செயல்.

*

தடையிடை வாராது செய்க வினை
தடைபட்டால் இடைவிடாது செய்க அதனை

திட்டமிட்டதை வினைமுடியும் வரை தெரிவிக்காதே
அப்படிச் செய்தால் இடையில்வரும் பெருத்த தீதே

சொல்லுதல் யாவர்க்கும் எளிதான ஒன்று
சொல்லிய வண்ணம் செய்தல் அப்படியன்று

எண்ணியர் திண்ணியரா யிருக்குமட்டும்
எண்ணிய எண்ணியாங்கு கிட்டும்

திட்பம் உடையோர் தேருக்கச்சாணி போன்றோர்
அவரின் உருவுகண்டு எள்ளார் சான்றோர்

செய்வது என்று தீர்மானித்த பின்னால்
தாழ்த்தாது விரைந்து செய்க தன்னால்.

## 68 வினை செயல்வகை

முடிவும் இடையூறும் முற்றியாங் கெய்தும்
படுபயனும் எண்ணியே பார்த்துமுடிவெடுத்த-
பின்னே முடங்கப் பெறாது வினைசெய்தல்
தன்னே ரிலாத தரம்.

*

விசாரித்து, ஆய்ந்து துணிக
பின், காலம் தழ்த்தாது துணிவை அணிக.

நீட்டித்துச் செய்வதை நீட்டிக்க
தாழ்த்தாது செய்ய வேண்டியவற்றை நீட்டற்க

முழுதும் அணைக்காதுவிட்ட தீ பின் எரிந்து கெடுக்கும்
முடிக்காத வினை,பகை இரண்டும் வளர்ந்து கெடுக்கும்

பொருள், கருவி, காலம், வினை, இடம்
இவ்வைந்தும் எண்ணிச் செய்யா வினை முடம்

வேண்டும் முயற்சி, இடையூறு,விளைபயன்
மூன்றும் கருதிச் செயல் முயல்தல் நலன்

யானையால் வேறோர் யனையைப் பிடிப்பது
போன்றதே வினையால் வேறோர் வினையை முடிப்பது.

## 69 தூது

ஆன்ற மதியும் அமைந்த திட உருவும்
தோன்றும் துணிவும் சொலும்திறனும்ஏன்ற-தோர்
ஏதத்துக்அஞ்சா தினிதுரைக்கும் பண்புமுள (கு)
தூதன் அரசர்க்குத் தூண்

*

தூதுக்குப் பண்புகள் யாவை?
அன்பறிவு சொல்வன்மை தேவை.

தோற்றப் பொலிவு, கல்வி அறிவு
தூதனுக்கு வேண்டும் இம்மூன்றின் செறிவு

தொகுத்துரைப்பான்,மகிழச் சொல்வான்
நன்மை வரும்வகை சொல்லித் தூதன் வெல்வான்

பகைவர் சினத்துக்குத் தூதன் அஞ்சான்
தனக்காக எவரையும் அவன் கெஞ்சான்

முறையறிந்து,காலம் கருதி, நன்மை யாது
என்று இடனறிந்து எண்ணி உரைப்பான் தூது

இறுதி பயப்பினும் எஞ்சாது
வேந்தர்க்கு உறுதி பயப்பான் தூது

## 70 மன்னரைச் சேர்ந்தொழுகல்

இளையன் இனமுறையன் என்னாமல், மன்னர்
உளமுணர்ந்து கேட்ப உரைத்தேஅளவளாம்-
போதில் எரிமுன்னே போதருவார் போலிருத்தல்
தீது தொடராத் திறம்.

*

நீங்கின் குளிரும், நெருங்கின் சுடும் நெருப்பு
அரசர்கள் தன்மை அந்நெருப்பிற்கு ஒப்பு

மன்னன் விரும்புவன எல்லாம் விரும்பாத தன்மை
மன்னரால் ஆக்கம் பெறப்படும் நன்மை

பெரியோர்கள் அவையில் காதோடு பேசுதல் ஆகாது
ஒருவருக்கொருவர் அவையில் சிரித்துப் பேசுதல் தீது

அரசன் விரும்புவனவற்றை மேற்சென்று சொல்லுக
பயனிலவற்றை எப்பொழுதும் சொல்லற்க!

அரசன் இளையன், உறவினன் என்று
அவமதித்தல் நன்றன்று

வேண்டியவன் மன்னன் என்று
வேண்டாத செய்தால்கேடு நிற்கும் முன்சென்று.

## 71 குறிப்பறிதல்

முகத்தில்அகத்தின் மொழிதெரியும்,கூறா(து)
அகத்தை அறியும் அறிவுத்தகவோனை -
என்ன கொடுத்தேனும் ஏற்க, குறிப்பறிவான்
உன்னதத் தெய்வத்துக் கொப்பு.

*

கூறாமல் குறிப்பறிதல் ஒருவர்க்குப் பீடு
ஐயமின்றி அகத்ததுணர்வார் தெய்வத்திற் கீடு

எவருக்குண்டோ கூறாமல் குறிப்புணரும் பேறு
மற்றோர்போல் தோன்றிடினும் அவர் தன்மை வேறு

பளிங்கு அடுத்தது காட்டும்
நெஞ்சம் கடுத்தது முகம் காட்டும்

குறிப்பின் குறிப்பு யாது
என்றுணராக் கண்ணால் பயன் ஏது?

முகம் நோக்கி அகம் அறிவார்
தம் முகம் நோக்க அவர் எல்லாம் அறிவார்

கண்ணே அளக்கும் கோல்
அதை உணர்ந்தால் அஃதே மேல்.

## 72 அவைஅறிதல்

தம்மினும் கற்றார்முன் தாமடங்கி, ஒத்தார்க்குத்
தம்மை வெளிக்காட்டி, சார்ந்த அவைச்செம்மை-
அறிந்து, சிறப்பாய் அவைபோற்றச் சொல்லல்
நிறைந்த புலமை நெறி.

*

ஆன்றோர் அவையில் அடக்கம் வேண்டும்
அவர்களிடம் அது நல்ல எண்ணத்தைத் தூண்டும்

சொல்லின் நடையறிந்து கூற வல்லார்
அதன்பொருள் உணராமற் சொல்லார்

நூல்வல்லான் சொல்லிழுக்கு
தூய வெண்மையில் பட்ட அழுக்கு

கற்றறிந்தார் அவையில் சொல்லும்
கற்றறிந்தார் கல்வி வெல்லும்

நாற்றங்காலில் சொரிந்த நீர் பயிர் வளர்க்கும்
நல்லறிஞர் அவையில் சொல்லல் அறிவை வளர்க்கும்

நல்லவையில் செலச் சொல்லுவார்
புல்லவையில் பேசினால் இழுக்குற்றுச் செல்லுவார்

## 73 அவையஞ்சாமை

கற்றதனை அஞ்சாது கற்றோர்அவைநடுவே
உற்ற சுவையோ டுரைத்திடுககற்பதனை-
ஆற்றின் அளவறிந்து ஆய்ந்திடுக,ஈதொன்றே
மாற்றம் உரைக்கும் வழி.

*

அறிஞர்கள்பால் கற்றவை செலச் சொல்லுவார்
அவர்களால் கற்றவர் என மதிக்கப் படுவார்

கற்றவர்களிடம் தாம் கற்றதைச் செலச் சொல்லுக
அறிவு மிக்காரிடம் மிக்க பொருள் அறிந்து கொள்க

அளவைநூல் அறிந்து கற்பது ஏற்றம்
அதனால்அவையஞ்சாமல் கொடுக்க இயலும் மாற்றம்

அவையஞ்சிக் கற்றவை சொல்லாதவர்
எத்தனை கற்றும் அதனால் பயன் இல்லாதவர்

களம் அஞ்சுவோர் கையில் வாள்போல்
அவையஞ்சுவோர் கையில் நூல்

கற்றறிந்தும் நல் அவை அஞ்சுவார்
இழிவில் கல்லாதவரை விஞ்சுவார்.

## 74 நாடு

கேளாது வரிநல்கும் கேண்மை உடைமக்கள்
மாளா வளங்கள்,மலைபுனல்கள்தாளாப்-
பிணியின்மை, ஏமம், விளைவின்பம்,செல்வம்
அணியாகும் நாட்டுக் கவை.

*

நிறைவளம் உளதெனும் பீடு
கொண்டது நல்லதோர் நாடு

பசி,பிணி,பகை
இல்லாதிருப்பது நாட்டிற்குத் தகை

உட்பகை, மாறுபடு குழு
இருப்பது நாட்டிற்கு வழு

கெட்ட போதும் வளம் குன்றாது
இருப்பதே நாடுகளில் தலை என்றோது

நாடா வளத்தது நாடு
நாடல்ல நாட வளந்தரும் நாடு

எல்லா அமைவும் பொருந்திய போதும்
வேந்து அமைவின்றேல் பயனில்லை ஏதும்.

## 75 அரண்

முற்றுகை இட்டோர் முனைமுகத்துத் தாம்சாய
பற்றி யிருப்போர் பயனடையஉற்றபெரும்-
வேகம்,வினைத்திட்பம் மேவிடுவோர் காப்பாக
ஆகி இருப்ப தரண்.

*

ஆற்றலர்க்கும்,அஞ்சுவார்க்கும் அரண் காப்பு
நீரும் மண்ணும், மலையும் காடும் அரணின் சேர்ப்பு

உயர்வு, அகலம், திண்மை, அருமை
நான்கும் இயைவது அரணின் பெருமை

நல்லரணில், காக்கவேண்டிய இடம் சிறியது
தாக்கப்படும் இடம் பெரியது,அரியது.

பற்றற் கரியது அரண்,பசிக்குணவுடையது அரண்
இடத்தில் பெரியது அரண்,எல்லாம் உடையது அரண்

நல்லரண் புறப் பகையை உள்விடாது
அகத்தினர்க்குக் காப்பாய் வெளிவிடாது

தேவையான எல்லாம் அரண் பெற்ற போதும்
வினைமாட்சி இல்லாயின் பயனில்லை ஏதும்.

## 76 பொருள் செயல்வகை

அறம் இன்பம் ஆக்கம் அருமதிப்பு,தீதில்
நெறியில் வரும்பொருளால் நேரும்செறிவாய்-
ஒருநலனும் இல்லா ஒருவரையும் பாரில்
பொருளாகச் செய்யும் பொருள்.

*

பொருளல்லவரையும் பொருள் பொருளாக்கும்
எல்லோரும் போற்றும் பெருமை சேர்க்கும்

தீதின்றி எந்தப் பொருள் வரும்
அது அறனும் இன்பமும் தரும்

பொருளாக்கம் மிகமிக நன்று
அருள், அன்பொடு வாராப்பொருள் நன்றன்று

செல்வச் செவிலியாம் பொருள்
தரும் அன்பின் குழவியாம் அருள்

பகைவரைச் செருக்கறுக்கும் படைக்கலம்
பொருளைச் செய்க, அதனால் வரும் நலம்

நெறியால் மிகுதி பொருள் செயின்
அறம் பொருள் இரண்டும் எளிதாம் அவர் வயின்.

## 77 படைமாட்சி

நால்வகைத்தாய், தானைக்கு நற்றிறமை மிக்கதுவாய்,
தோல்வியை எண்ணாத் துணிவுடைத்தாய்மேல்வரும்-
கூற்றுக்கும் அஞ்சாக் குறியுடைத்தாய் உள்ளபடை
ஆற்றல் அரசர்க் கணி.

*

விழுப்புண் அஞ்சாப் படையுள நிலை
அரசரின் செல்வத்துள் எல்லாம் தலை

வெற்றுக் கூச்சலா எதிர்த்து வெல்லும்?
வீரப் பாய்ச்சலே அழித்துக் கொல்லும்.

வஞ்சனையில் வீழாது, அழித்தாலும் சாயாது
வழிவந்த படைவீரம் என்றைக்கும் மாயாது.

ஆற்றல் உள்ள படை
கூற்றுக்குப் போடும் தடை

ஆற்றல் இலையெனினும் அணிவகுப்புக் கம்பீரம்
கண்டதும் ஓயும் பகைப் படையின் வீரம்

சிறுமை,வெறுப்பு,வறுமை இல்லாப்
படைமுன் பகைவர் படைகள் நில்லா!

## 78 படைச்செருக்கு

போர்முகத்தே பொருது புண்படா நாளெல்லாம்
சீர்கெட்ட நாளாகச் சிந்தித்துபேர்பெற்ற-
நற்புக ழுக்காக நல்லுயிரை ஈந்துவிடும்
பொற்புடை யார்கழல்தான் பூண்.

*

தலைவனின் வீரத்தில் பெருமிதம்
கொளும் படை நோக்கி வெற்றி வரும் நிதம்

இம்மியில் செலுத்தாதே அறிவை
உயர்ந்ததை அடைய என்றும் குறி வை.

வெல்வது மட்டுமா படைக்கு வீரம்?
தோற்றோரைப் புல்லுதல் அவ்வீரத்தின் சாரம்

யானைமேல் வேல் போக்கி வேலின்றி இருப்பான்
மேனியில் பாய்ந்தவேல் பிடுங்கிச் சிரிப்பான்

வேலொன்று தனைநோக்கிப் பாய்ந்து வரும் போது
கண்ணிமைப்பதுகூட வீரர்க் காகாது.

தன்னரசன் கண்பனிக்க வைக்கும் சாக்காடு
வேண்டிப் பெறவெண்டும் ,உண்டோ அதற்கீடு?

## 79 நட்பு

நல்லறி வாளனின் நட்பு வளர்பிறைபோல்
பல்கும்,இடிக்கும், பயன்கொடுக்கும்நில்லாமல்-
ஆடை அவிழ அடுத்துதவும் கைபோலக்
கூடுவதே நட்பின் குணம்.

*

அருமையான செய்கை நட்பு
வினைக்குக் காப்பாக அதற்கிலை ஒப்பு

அறிவுளோர் நட்பு வளர்பிறை
அறிவிலார் நட்பு, தேய்ந்து தளர்பிறை

படிக்கப்படிக்கச் சுவைமீறும் நூல்நயம் போலே
பழகப்பழக இனிக்கும் பண்புளார் தொடர்பு மேன்மேலே

நட்பு சிரித்து மகிழ மட்டுமன்று
மீறினால் இடிக்க வேண்டும் மேற்சென்று

எங்கள் நட்பு இத்தனை அருமை
எனச் சொன்னாலும் குன்றும் அதன் பெருமை.

அழிவின் வழி நீக்கும்,நல்வழி சேர்க்கும்
துன்பத்தில் நட்பு, தானும் பங்கேற்கும்.

## 80 நட்பாராய்தல்

ஆய்ந்தாய்ந்த நட்புத்தான் அல்லறக்கண் கைகொடுக்கும்
சாய்ந்த பொழுது தலைநிமிர்த்தும்வாய்ந்தவழி-
அஞ்சா தழச்சொல்லும், அல்ல திடித்துரைக்கும்
நெஞ்சாரக் கொள்க நிமிர்ந்து.

*

நட்புக் கொண்டவனை விடுதல் அரிது
ஆராயாமல் செய்யும் நட்பால் கேடு பெரிது

குணம், குடிமை, குற்றம் சுற்றம் பார்த்து,
கொள்ளும் நட்பே நலம் தரும் சேர்த்து.

அழஅழ இடித்து நல்வழி காட்டும்
வல்லவர் நட்பே ஆக்கம் கூட்டும்

கேடு வருவது கூட ஒருவகையில் மேல்
அதுதான் கிளைஞரை நீட்டி அளக்கும் கோல்.

உள்ளம் சிறுமை கொள உள்ளற்க,
துன்பத்தில் கைவிடுவார் நட்பைக் கொள்ளற்க!

குற்றமிலார் நட்பை ஏற்றுத் தாங்குக
பொருந்தார் நட்பை ஏதுகொடுத்தும் நீங்குக!

## 81 பழைமை

நீண்ட பழநட்பு நீதம் உடையவர்
தூண்டுபிழை கண்டும் தொடர்பறார்வேண்டியே-
கேடில்லா நட்புடைய கேண்மையரை ஒண்ணாரும்
நாடிப் புகழ்வார் நலம்.

*

நண்பரின் உரிமை அருமை
பழிக்காமல் அதை மதித்தல் பெருமை

நண்பரின் உரிமையை மதிக்காத போது
பழகிய நட்பால் பயன் ஏது?

பிழை செய்தாலும் அது உரிமை என்றே
எண்ணி நட்பைப் போற்றுக நன்றே

நண்பனால் கேடே வருவதாயினும்
நட்பைத் துறவற்க தம்நலம் போயினும்

பழைமையில் நிற்பவர் நட்பைத் துறவார்
அழிவே வரினும் நட்பை மறவார்

பழைமை நட்பை அளக்கும் அலகு
அதன்வழி உற்றால் போற்றும் உலகு.

## 82 தீநட்பு

உள்ளொன்றி,மன்றினிலே ஊறுசெய்வார் நட்பைவிட
தெள்ளித-அறிவுடையார் தேர்பகைமை (து)ள்ளிடுக
பொல்லா இடும்பை புகுத்தும், வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

*

பண்பிலார் நட்பு நட்பன்று
அது பெருகலின் குன்றலே நன்று

எதிர்பார்த்துச் செய்கின்ற நட்பு
விலைமகளுக்கும் கள்வருக்கும் ஒப்பு

துன்பத்தில் கைவிடும் நட்பா இனிது?
அத்தகு நட்பைவிடத் தனிமை இனிது.

அறிவிலார் நட்பு கெடுக்க வல்லது
அறிவுடையார் பகை அதனினும் கோடிமடங்கு நல்லது.

சிரிக்க மட்டும் பழகும் நட்பு என்ன பெறும்?
பகைத் துன்பத்தினும் அது பத்தடுத்த கோடியுறும்

வினை, சொல் இணையா நட்பு
கனவிலும் சுடும் வெப்பு.

## 83 கூடா நட்பு

தொழுதகை யுள்ளும் படையொடுங்கும், தன்னுள்
பழுதுற்று மேல்நகும் பண்பில்ஒழுக்கத்தார்-
தம்மை அவர்வழியே தாம்சென்று வீழ்த்துவதே
செம்மை உடைய செயல்.

*

வெளியில் நகைப்பர், உள்ளே பகைவர்
விலைமகள் மனம்போல் மாறும் தகையர்

முகத்தில் நகை ,அகத்தில் பகை
அத்தகு வஞ்சர் அஞ்சப்படும் வகை

நண்பர்போல் நல்லவை சொல்லி
உளத்தில் ஒட்டாதார் என்றும் உயிர்க் கொல்லி

வணங்கும் கைக்குள்ளும் ஒடுங்கும் படை
போலி வருத்தம் .உண்மையை மறைக்கும் தடை

முள்ளை முள்ளால் எடு.
போலி நட்பை அவ்வழியே தடு.

பகைவன் நண்பனாய் வரும்போது
முகத்தில் நகைத்துப் பின் கைவிடு தப்பாது.

## 84 பேதைமை

பேதையான் நல்லொழுக்கம் பேணாதான்,இங்கதனால்
தீதர் மகிழ்ந்து திளைத்திடுவர்பேத-ையான்
ஓதி அறிந்தும் உயர்வில்லான்,பேதைமையால்
ஊதியம் இல்லை உயிர்க்கு

*

பேதைமை என்பது ஏதம் கொள்ளும்
நன்மை கொடுக்கிற ஊதியம் தள்ளும்

பேதைமையுள் பேதைமை ஆவது
தகுதியற்ற வற்றை மேற்கொளப் போவது

கற்ற துணர்ந்து அதன்வழி நிற்பவன் மேதை
கற்றபடி ஒழுகாதவன் பேதை

சுற்றம் பசிக்க அயல் புசிக்கும்
பேதையின் செல்வம் இவ்வழி நசிக்கும்

போதை மீறியோர் மேலும் குடித்தால் எப்படி
பேதையின் கையில் செல்வம் சேர்ந்தால் அப்படி.

பேதையின் கேண்மை மிகவும் நல்லது
பிரியும் போது இன்பம் தரவல்லது.

## 85 புல்லறிவாண்மை

சொன்னாலும் தான்தேரான், சொந்த மதியில்லான்
இன்னல் தரும்பிணிக் கீடாவான் அன்னவன்-
ஆடை உடுத்தாலும் அம்மணந்தான்,அன்னவர்க்கு
மேடை கொடுத்தாலும் வீண்.

*

இல்லாததில் இல்லாதது அறிவில்லாதது
மற்றதில்லாதது இல்லாததில் செல்லாதது

அறிவில்லான் நெஞ்சுவந்த ஈகை
பெற்றவனின் பேறு தந்த வாகை

அறிவுடையேன் யான் எனத் தருக்குகின்றவன்
புல்லறிவாளனெனப் படுகின்றவன்

புல்லறிவாளன் மறைப்பான் தன் அற்றம்
ஆனால் மறையான் தன் குற்றம்

புல்லறிவாண்மை இரகசியம் காக்க அறியாது
எனவே துன்பம் என்றும் குறையாது

அறிவிலான் செருக்கு மிகவும் ஈனம்
அவனுக் கறிவுறுத்தல் அறிவீனம்.

## 86 இகல்

மாறுபாட் டாலே மதிமயங்கும்,நெஞ்சத்து
வேறுபா டில்லாமை வெற்றிதரும்மாறி-
இகல்மிக வேட்டலின் இன்னாத தில்லை
நகுதல் சிறந்த நலம்.

*

மாறுபட்டுப் பொருந்தாததாய்
தீக்குணம் வளர்க்கும் இகல் ஒரு நோய்

பிரிவாக்க ஒருவன் இகல் கொண்டாலும்
எதிராய் இகல் கொள்ளாதே எக்காலும்

இகலெனும் எரிநோய் நீங்கி
இருப்பவர்க்குப் புகழ்வரும் ஓங்கி.

துன்பத்துள் துன்பம் இகல் கைக்கொள்ளல்
இன்பத்துள் இன்பம் அதனைத் தள்ளல்

இகலைச் சாய்த்தால் ஆக்கம் வரும்
அதனை ஏற்றால் கேடு தரும்

இகல் காணார் ஆக்கம் வருங்கால்
அதனை மிகக் காண்பார் கேடு வருங்கால்.

## 87 பகைமாட்சி

அஞ்சவேண் டாததற்கும் அஞ்சுவான்,கோபத்தான்
கஞ்சன்,வலியில்லான்,காமத்தான் நெஞ்சத்தில்-
அன்பில்லான் நூல்கற் றறியாதான்,தேராதான்
தன்னைப் பகைத்தல் தகை.

*

வலியார்மேல் பகை கொள்ளற்க
மெலியார்மேல் பகை தள்ளற்க!

அன்பு,துணை,வலிமை மூன்றும் இல்லான்
துணிவுடன் என்றும் பகைமேல் செல்லான்

அஞ்சாமை,அறிவு, அமைவு, ஈகை
இல்லான்மேல் பகைவன் கொள்வான் வாகை

தீராச் சினத்தன்,நிறையிலன் தன்னை
எங்கும்,எப்போதும் வெல்லும் பகை முன்னை

காமம், காரணமில் வெகுளி இவையுடையான்
மேற்பகை கொள்க,அவன் வெற்றியடையான்

அடுத்திருந்து மாணாத செய்வான் பகைமை
ஏது கொடுத்தும் கொள்ளுதல் தகைமை.

## 88 பகைத்திறம் தெரிதல்

பகை வேண்டாம்,ஆயின் பழுதாம் பகைமை
இகல்வந்தால் இன்னே இறுக்கஅகமறியா-
அன்பரி டம் துயரும்,அல்லா ரிடம்மெலிவும்
என்றைக்கும் சொல்லா திரு.

*

விளையாட்டுக்குக் கூட
பகை கொள்ளாதே வாட

வில்லேர் உழவர் பகை கொண்டாலும்
சொல்லேருழவர் பகை கூடா தெக்காலும்

துணையின்றிப் பலரிடம் பகை நட்டவன்
பித்தனைக் காட்டிலும் மதி கெட்டவன்

பகை நட்பாய்க் கொள்ளும் பண்பாளன்
உலகம் அடங்கும் தகைமையாளன்

துணை வேறில்லை, பகையோ இரண்டு
ஒன்றைத் துணையாய்க் கொளநலம் உண்டு.

துயர் உணரா நண்பரிடம் உன்துயர் விரிக்காதே
பகைவரிடம் உன்றன் பலவீனம் உரைக்காதே!

## 89 உட்பகை

நோய்செய் நிழல்நீர்போல் நோகடிக்கும் உட்பகையை
ஆய்ந்தஞ்சிக் காத்தல் அறிவுடைமைஏய்க்கின்ற-
உட்பகையோ டேவாழ்தல் ஓர்குடத்தில் பாம்புடனே
உட்பட் டிருப்பதற்கு ஒப்பு.

*

வாள்போல் பகைவரிடம் பயப்படாதே
கேள்போல் பகைவரின் வயப்படாதே

மனம் திருந்தா உட்பகை
தரும் இனம்விரும்பா ஏதம்பல் வகை

செப்பும் மூடியும் அன்ன உறவு
உட்பகை கொண்டாலென்றும் குறைவு

அரம் பொருத இரும்பு தேயும்
உட்பகை உற்ற குடி தேய்ந்து காயும்.

எள்ளைப் பிளந்த அளவினதே என்றாலும்
உட்பகையால் வரும் கேடு மேன்மேலும்

உடம்பாடிலாமல் ஒன்றாக வைப்பு
குடங்கரில் பாம்பொடு வாழுதற் கொப்பு.

## 90 பெரியாரைப் பிழையாமை

பெரியோரைப் பேணாப் பிழைசெய்யின் கேட்டுக்(கு)
உரியோராய் என்றும் உழல்வர்அரிதாய-
எல்லாம் இருந்தாலும் ஏறும் அவர்சினத்தால்
இல்லாத தாக இறும்.

*

காவலில் எல்லாம் தலையாய காவல்
பெரியோரைப் போற்றும் பண்பினை மேவல்

ஆற்றலர்க்குத் தீங்கு செய்தல்
தானே தன்தலையில் மண்ணைப் பெய்தல்

திறமையோருக்கு இல்லாதவன் செய்கிற தீங்கு
கூற்றத்தைக் கையால் அழைக்கிற பாங்கு.

தீயினால் சுடப்படின் உண்டு உய்வு
பெரியாரைப் பிழைத்தால் என்றும் தொய்வு

பெரியோர் கொண்டுவிட்டால் கோபம்
வசதி வாழ்வால்,வான்பொருளால் என்ன இலாபம்?

உயர்ந்த கொள்கையுடையோரை மீறின்
வேந்தனும் கெடுவான் அவர் ž‍றின்.

## 91 பெண்வழிச்சேறல்

இல்லாளுக் கஞ்சி இயல்பழிந்து தாழுபவன்
நல்லா ரிடத்தும் நகையுறுவான்இல்லேவல் -
செய்வானில் பெண்ணேசிறப்புடையள்,ஆண்தன்மைக்(கு)
அய்யோ அவனோர் அவம்.

*

இல்லாளுக்கு அடங்குபவன்
வாழ்க்கையில் முடங்குபவன்

பெண்ணாசை கொண்டேவல் செய்வானின் ஆக்கம்
அவன் ஆண்மைக்குப் பெருமையைப் போக்கும்

இல்லாளுக்கு அஞ்சுவான்
நல்லார்க்கு நல்லன செய்ய அஞ்சுவான்

தேவர்கள்போல் வளம் பெற்ற போதும்
பெண்ணேவல் செய்தால் பெருமையிலை எப்போதும்

பெண்ணேவல் செய்வானால் ஆணினத்திற்கே சிறுமை
அவனினும் நாணுடைப் பெண்ணுக்கே பெருமை

பெண்ணேவல் செய்வானின் இல்
அறவினையும் பிறவினையும் இல்.

## 92 வரைவின் மகளிர்

இருட்டில் பிணத்தை இறுகணைத்தற் கொப்பாம்
பொருட்பெண்டிர் பொய் முயக்கம், போகச்சிரிப்பில்-
கவரும் விலைமகளும் கள்ளும் கவடும்
தவற்றுக்குள் ஒன்றாம் தரம்.

*

பொதுவாக இன்சொல் இன்பம் தரும்
ஆனால் விலைமகள் இன்சொலால் இழுக்கு வரும்

பொருட்பெண்டிர் பொய்மை அணைப்பு
இருட்டறையில் பிணத்தை அணைப்பதற் கொப்பு

அருட்பொருள் நாடும் அறிவின் மிக்கார்
பொருட்பெண்டிர் கண்வலையில் சிக்கார்

அழகால் செருக்கும் விலைமகள் ஆட்டம்
புகழ் நாடுவோர் கொள்ளார் அதன்மேல் நாட்டம்

மதிநலம் மிக்க நல்லார்
விலைமகள் தன்னைப் புல்லார்

விலைமகள், கள், சூதாட்டம்
இம்மூன்றைக் கண்டு திருமகள் எடுப்பாள் ஓட்டம்.

## 93 கள்ளுண்ணாமை

உண்ணற்க கள்ளை ஒருகாலும்,கள்ளுண்டால்
உண்டதுவும் நஞ்சினுக் கொப்பாகும்எண்ணிச்-
சிரிப்பார் உலகத்தார்,சேர்ந்த சிறப்பும்
சரியும்,தணியும் தரம்.

*

கள்ளின் மேலே காதல்
புகழ்சேர் வாழ்வின் சாதல்

சான்றோர் பாராட்டு
இல்லை கட்குடியர் மாட்டு

கள்ளில் உறைந்தவர்
நாணம் துறந்தவர்

பொருள்கொடுத்துக் கொள்ளும் மயக்கம்
அறியாமை எனச் சொல உண்டோ தயக்கம்?

நீருக்குள் தீப்பந்தம் கொண்டு தேட முடியுமா?
கட்குடியர் புத்தியைத் திருத்த முடியுமா?

குடியாத போது குடித்தவனைக் கண்டு
திருந்தக் கூடாதா தெரிந்து கொண்டு?

## 94 சூது

வெலுஞ்சூது தூண்டில்வாய் மீனொக்கும்,வென்றும்
நலம்மாய்க்கும்,மேன்மை நசிக்கும்பலரும்-
இகழும் நிலையாம், இதன்பால் முகடி
அகலா திருப்பாள் அறி

*

இரையுண்டு தூண்டில்மீன் சாகும்
வென்றாலும் சூதில் ,பொருள் எல்லாம் போகும்.

சூதில் வெல்வது ஒன்றின் கூறு
அதில் தோற்பதோ நூறு நூறு

சூது கொடுக்கும் சிறுமை
அதற்கிணை இல்லை வேறு வறுமை

சூதெனும் மூதேவிக் காட்படுவார்
உண்ணார்,துன்புற்றுக் கெடுவார்

கல்வி,செல்வம்,ஊண்,ஒளி,உடை
இவ்வைந்தின் வருகைக்குச் சூது தடை

இழக்க, இழக்கச் சூதின் மேல் வரும் பற்றைப் போலே
உடல் வருந்த வருந்த உயிருக்குப் பற்று உடல் மேலே.

## 95 மருந்து

அற்ற தளவறிந்தும், ஆம்தீ அளவறிந்தும்
உற்ற முறையிலே உண்ணுகஎற்றைக்கும்-
நோய்நாடி , நோய்முதல் நாடி, அதுதணிக்கும்
வாய்நாடி செய்தல் வகை.

*

உண்டது செரிக்குமுன் உண்ண வேண்டாம்
இதைக் கடைபிடித்தால் மருந்தே வேண்டாம்

செரித்தபின் உண்க அளவறிந்து
அதனால் வாழலாம் ஆயுள் நிறைந்து

உண்டது அற்றுப் பசித்தபின் உண்க
ஒத்த உணவைத் தெரிந்து உண்க!

ஒவ்வா உணவை ஒதுக்கித் தள்ளுக
அளவைக் குறைத்துச் சத்தைக் கொள்ளுக

செரிக்கும் தீயின் அளவை அறியாது
உண்பவனிடம் நோய் பெருகும், குறையாது.

நோயை ஆய்ந்ததன் காரணம் அறிக
அறிந்தபின் தணிக்கும் முயற்சி புரிக!

## 96 குடிமை

ஈகை,ஒழுக்கம்,இகழாமை,நாண்,இன்சொல்
ஆகும் நகை,வாய்மை அத்துணையும்பாகமெென-
நல்ல குடிப்பிறந்தார் நல்லியல்பாம், அன்னார்வாய்ச்
சொல்லவரைக் காட்டும் சுடர்.

*

நல்ல குடிப்பிறந்தவர்
நாணமும் செப்பமும் நிறைந்தவர்

ஒழுக்கம், வாய்மை,நாண்
நற்குடிப் பிறந்தாரின் பூண்

இன்சொல், இகழாமை,ஈகை, நகை
இந்நான்கும் வாய்மைக் குடிக்கு வகை.

கோடிகோடியாய்ப் பொருள் பெற்றாலும்
குடிப்பிறந்தார் குன்றுவ செய்யார் எக்காலும்.

பூரண நிலவின் மறுப்போல் முற்றும்
தெளிவாய்த் தெரியும் குடிப்பிறந்தார் குற்றம்

நிலத்தின் இயல்பைப் பயிர் காட்டும்
குடிப்பிறந்தார் பண்பை அவர் வாய்ச்சொல் காட்டும்

## 97 மானம்

இன்றி யமையா திருப்பினும்,மானத்தைக்
குன்ற விடுவதனைக் கொள்ளற்கஒன்றும்-
மயிர்நீப்பின் வாழாக் கவரிமான் அன்னார்
உயிர்நீப்பர் மானம் உறின்.

*

இன்றியமையாதது இச்செயல் என்று
குன்ற வருவன செய்வது நன்றன்று

செல்வமுள்ள காலத்தில் வேண்டும் பணிவு
சுருங்கிய காலத்தும் வேண்டும் உயர்வு

நிலையின் இழிந்த வாழ்வு
தலையின் இழிந்த மயிரெனத் தாழ்வு

வாழ்வதுமேன் ஒட்டார்பின் சென்று?
நிலைநின்று கெட்டான் எனப்படுதல் நன்று.

குன்றி மணியளவு பிழை செய்தாலும்
குன்றின் அனையார் புகழ் கெடும் மேலும்.

கவரிமான் உயிர்நீக்கும் மயிர் நீப்பின்
அத்தகையோர் உயிர்நீப்பர் மானம் நீப்பின்

## 98 பெருமை

பிறப்பாலே மேன்மை பெறுவதில்லை,செய்கைச்
சிறப்பாலே மேன்மையெலாம் சேரும்முறையாகத் -
தன்னையே காத்தல் தகைமை,சிறுமை
தன்னை வியப்பது தான்.

*

பிறப்பால் எல்லா உயிரும் ஒன்று
செய்தொழிலால் வரும் சிறப்பு அவ்வாறன்று

இழிகுணமில்லார் கீழிருந்தும் கீழல்லர்
உயர்குணமில்லார் மேலிருந்தும் மேலல்லர்

அரிய செயல்களைச் செய்யும் வழியில் சென்று
பெருமை உடையவர் செய்வார் முயன்று

வரம்பு மீறிய செய்கைகளை மீண்டும் மீண்டும்
சிறியர்பால் சேரும் சிறப்புகள் தூண்டும்

பெருமை என்றும் பணியும்
சிறுமை தற்பெருமை பூணாய் அணியும்

செருக்கற் றிருப்பது பெருமை
செருக்கில் திளைப்பது சிறுமை

## 99 சான்றாண்மை

அன்புநாண் ஒப்புரவு வாய்மையொடு கண்ணோட்டம்
என்றைக்கும் சால்புத்தூண் என்றாகும்இன்னாமை-
செய்தார்க்இனியவே செய்து பிறர் தீமை (கு)
வையாமை சால்பின் வழி.

*

நல்லவை எல்லாம் சான்றாண்மைக்குக் கடமை
அ்து கொண்டோர்க்கு சான்றாண்மையே உடைமை

அன்பு ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மை நாண்
சான்றாண்மையைத் தாங்கும் தூண்

தவம்,கொல்லா நோன்புடையது
சான்றாண்மை பிறர்க்குத் தீமை செய்யா மாண்புடையது

பணிதல் செயற்கரிய செய்வாரின் தன்மை
அது தரும் பகைவரை நண்பராய் மாற்றும் நன்மை

சால்பு என்னும் உறுதி
படைத்தோர்க்கு வறுமையும் ஒரு தகுதி

சான்றவர் சான்றாண்மை குன்றல் தீது
பூமி பாரத்தால் நிலைகுலையும் அப்போது.

## 100 பண்புடைமை

அன்பும் குடிப்பிறப்பும் ஆன்றதொரு பண்புடைமை
மன்னும் உலகால் வணக்கமுறும்இன்னாப்-
பகையுள்ளும் பண்புபா ராட்டுவார் மாட்டுப்
புகலாக நிற்கும் புகழ்.

*

எளிய பழக்கம்
பண்பு ஒழுக்கம்

பண்புடைமைக்கு உறுப்பு
அன்புடைமை, ஆன்ற குடிப்பிறப்பு

பயன்பட வாழப் பழகு
உன் பண்பைப் பாராட்டும் உலகு

பண்பாளனின் பகைமையிலும் பண்பு தோன்றும்
அல்லாதார் மகிழ்ச்சியிலும் இகழ்ச்சி ஊன்றும்

கூர்மையான அரம் போன்றவர்
பண்பிலையேல் மரம் போன்றவர்

கலத்தின் தீமையால் பால் திரியும்
சேர்த்த செல்வம் பண்பிலாமையால் திரிந்து சரியும்

## 101 நன்றியில் செல்வம்

தான்துய்யான், மற்றவர்க்கும் தானம் கொடுத்தறியான்
ஏன்பெற்றான் ஒண்பொருள் இவ்வுலகில்?-மேன்மையால்
தீண்டப் படாதவன் செல்வத்தைப் பின்னாளில்
வேண்டிப் பிறர்துய்ப்பார் வீண்.

*

உண்ணாமல் செல்வம் சேர்த்துப் பயனென்ன?
செத்தபின் உதவுமா தீனி அவன் தின்ன?

செல்வம் சேர்த்து ஈயாது
வாழும் வாழ்வால் பயன் ஏதுAAA?

கொடுக்காமல் சேர்ப்பான்,அதிலென்ன சாரம்?
அவனது பிறப்பு இவ்வுலகுக்குப் பாரம்

நடுவூரில் நச்சு மரம் பழுத்தால் யாவர்க்கும் தீது
விரும்பப்படாதவன் செல்வமும் ஆகாது

தானும் நுகராது, பிறர்க்கும் ஈயாது
கோடி கோடி செல்வம் சேர்ப்பதால் பயன் யாது?

அனுபவிக்காது சேர்த்த சொத்து
அடுத்தவர் அனுபவிப்பார் சேர்த்து வைத்து.

## 102 நாணுடைமை

பிறர்பழியும், தம்பழியும் நாணுவார்,நாணுக்
குறைபதி,நாணில் குணத்தைஅறம் நாணும்-
நாணுடைமை தானென்றும் நல்லணியாம், அஃதின்றேல்
பேணுகின்ற பீடும் பிணி.

*

நாணம் என்பது தகாததைச் செய்யக் கூசுவது
வேறாகும் பெண்களின் நாணமெனப் பேசுவது

உயிர்க்கெல்லாம் உடல் நிலைக்களம்
சான்றாண்மைக்கு நாணம் நிலைக்களம்

சான்றோர்க்கு நாணுடைமை அணி
அஃதின்றேல் பீடுநடையும் பிணி

பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நிறைகுடம்
உலகின் நோக்கில் அவர்கள் நாணுக்கு உறைவிடம்

நாணுள்ளார் உயிரைக் காக்க நாணைத் துறவார்
நாணைக் காக்க உயிர்விடவும் மறவார்

பிறர் நாணும் செயல்களைச் செய்திட நாணாதார்
அறம் நாணிப் போக ,நல்வழி காணாதார்.

## 103 குடிசெயல்வகை

முயற்சி, அறிவு முறியாப் பெருமை
அயராதே எப்போதும் ஆக்கல்மயங்கும்-
மடியின்மை,குற்றம் வராமலே காத்தல்
குடிசெய்வார் கொள்ளும் குணம்.

*

குடியை உயர்த்தாமல் ஓயேன் என்றே
முயலும் பீடுக் கீடு வேறன்றே!

விடாமுயற்சி,ஆன்ற அறிவு எனவிரண்டு
கொள்வான் குடியில் சேரும் உயர்வெலாம் திரண்டு

என்குடியை நன்னெறியில் உயர்த்துவேன் என்றே
சொல்வான் முன்னே கச்சைகட்டும் தெய்வம் நின்றே

குடிசெய்வான் எடுத்த செயல் தானே முற்றும்
உலகம் அவனைச் சுற்றமாய்ச் சுற்றும்

ஒருவர்க்கு எது நல்லாண்மை?
கடமையாய் ஏற்கும் இல்லாண்மை.

காலம் நேரம் பார்க்காது
காக்கும் குடி என்றும் தோற்காது

## 104 உழவு

உள்ள தனைத்தும் உழவுத் தொழில்தலையாய்க்
கொள்ளும், உழுதுண்பார் கோபுரத்தார்துள்ளும்-
பிறவெல்லாம் மற்றதன் பின்னேயாம்,ஆமாம்
சிறப்புள் உழவே சிறப்பு.

*

எவ்வளவு சுற்றினாலும் உழவுதான் இறுதிநிலை
எனவே எவ்வளவு உழன்றாலும் உழவே தலை

எல்லாரையும் சேர்த்து உழவு பொறுக்கிறது
எனவே உலகத்தாருக்கு அச்சாணியாய் இருக்கிறது

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்
மற்றவர் அவரைத் தொழுது பின்செல்வார்

உழவு நின்றால் வழியில்லை மற்று
பற்றற்றவர்க்கும் உழவுதான் பற்று

வந்து பார்க்காத உரிமையாளனைக் கண்டு
ஊடி வருத்தும் நிலம் கோபம் கொண்டு.

இலையெனச் சோர்ந்து கிடப்பான் தன்னைப்
பார்த்துச் சிரிப்பாள் பூமி அன்னை.

## 105 நல்குரவு

இன்மையின் இன்னாமை இன்னாத தாதலின்
இன்மை இளிவந்த ஏதமுறும்துன்பங்கள்-
சென்றடையும்,இல்லாதார் செப்பிடும் நற்சொல்லும்
அன்றைக் கவையில் அவம்.

*

வறுமையை விடத்துன்பம் தருவது எது?
வறுமை என்பதே அது

நற்குடிப் பிறந்தோரையும் வறுமை
பேசவைக்கும் இளிவந்த சொல்லென்னும் சிறுமை

வறுமை ஒரே ஒரு துன்பம் அன்று
பலவகைத் துன்பங்கள் படுத்தும் உடன்சென்று.

ஆழப் படித்திருப்பினும் வறியவன் சொன்னால்
"ஏழைசொல் அம்பலம் ஏறாது " முன்னால்

அறம்சாரா வறுமை
தாயும் மதிக்காத வெறுமை

நெருப்பினிடையேயும் தூங்கிடக் கூடும்
வறுமைத் துன்பத்தில் கண் தூங்காது வாடும்.

## 106 இரவு

இரப்பான் கரவா ரிடம் சென்இரத்தல் (று)
சரிதான்,பிழையில்லை,தானேபுரிந்து-
எடுத்துக் கொடுப்பார்க் கிரப்பார் இலையேல்
கொடுப்பதும் எவ்வாறு கூறு ?

*

கொடுக்கத் தக்கவரைக் கண்டு கேட்பது நன்று
கொடுக்கவிலையெனில் பழி கேட்பவர்க்கன்று

தரவல்லார் முன்நின்று இரப்பது அழகுடைத்து
அவர் பார்வை அனுப்பும் வறுமைக்கு விடைகொடுத்து

இரப்பவர் இருக்கிறார் எதனால்?
கொடுப்பவர் இருக்கிறார் அதனால்.

அவமதிக்காமல் கொடுப்பவரைக் கண்டு
இரப்பவர் மனம் துள்ளும் மகிழ்ச்சி கொண்டு

இரவலர் இல்லாத போது
ஈயும் புகழ் கிடைப்பது ஏது?

தானே வறுமைக்குச் சான்றெனத் தெரிந்து
இரவலன் அடக்குக சினத்தைத் தெளிந்து.

## 107 இரவச்சம்

இரத்தல் இயல்பென்றே எண்ணித் துயர்தீர்
தரத்தை முயலாதான் தாழ்வான் இரத்தலின்-
வேறில்லை என்றாலும் மேற்சென் றிரவாமை
பேறெல்லா வற்றிலும் பேறு.

*

மறைக்காமல் கொடுப்பவரிடத்தும் சென்று
இரவாமை கோடிமடங்கு நன்று

பிச்சைஎடுக்கும் நிலை எவர்க்கும் வாரா தொழிக!
அப்படி வந்தால் உலகியற்றியான் இடருற்றழிக!

வறுமைத் துன்பம் கடுமையிலும் கடுமை
இரந்து அதைத் தீர்ப்பது கொடுமையிலும் கொடுமை

தன் முயற்சியால் கிடைத்த கஞ்சி
இனிமையை வேறெது கடக்கும் விஞ்சி?

மறைப்போரிடம் போய் இரப்போரிடம் சென்று
இரப்பேன் பிச்சை எடுக்காதீர் என்று

கொடு என்று கேட்கும்போதே மறைகிறதே உயிர்
எங்கே ஒளிக்கிறது இல்லை என்பான் உயிர்?

## 108 கயமை

அச்சமே கீழ்களது ஆசாரம்,தன்கையால்
எச்சிற் பருக்கையும் ஈயாதார்அச்சுறுத்தும்-
மூர்க்கத்தைத் தான்கண்டால் முன்கொடுப்பார்,அக்கயவர்
வார்ப்பிலே மக்கள்போல் வார்.

*

மக்கள்,கயவர், வார்ப்பில் வேறுபாடில்லை
கயவரை ஒப்பவர் வேறு கண்டதில்லை

நல்லவரை விடக் கயவர் திருவுடையார்
எதற்கும் அவர் நெஞ்சில் அவலம் அடையார்

கீழோர், தம்மினும் இழிந்தோரைப் பார்த்து
அவரினும் தாம் மேலென மகிழுவர் ஆர்த்து

கயவருக்கு இரகசியம் காக்கத் தெரியாது
அடியைத் தவிர வேறெதுவும் அவர்க்குப் புரியாது

சொல்லொன்று போதும், சான்றோர் பயன்படுவர்
கரும்பைப்போல் பிழிந்தால்தான் கயவர் பயன்படுவர்

கயவர் பிறர்மேல் குறைகாண வல்லார்
மற்றவர் நலத்தில் மகிழ்ச்சியே இல்லார்.

## 109 தகையணங்குறுத்தல்

யார்கொல்இப் பெண்ணரசி,யார்கொல் அழகுமகள்
கூர்மை விழிப்பார்வை கொல்கிறதேஆர்வமுடன்-
பார்க்கின்ற போதினிலே பைத்தியமாய் ஆக்கியுயிர்
பேர்க்கின்ற கூற்றோஇப் பெண்?

*

இவளைக் கண்டென் நெஞ்சு மயங்குவதேனோ?
இவள் அணங்கோ,ஆய்மயிலோ,மாதர்தானோ?

இவள் படை கொண்டுவந்த தேவதையோ
பார்ப்பவளைப் பார்க்க இயலவில்லையே,என்ன வதையோ?

பார்த்தாலே இவள்கண்கள் வருகின்றன கொல்ல
பெண்தன்மைக்கு மாறுபட்ட இதை என்ன சொல்ல?

எமன்,கண், மான் என மூன்றும்
இவள் பார்வையில் கூட்டாய்த் தோன்றும்

இவளுக்கு அணிகலன்,மான்நேர் மடநோக்கு,நாண்
வேறுபல அணிகலன்கள் இவளுக்கு வீண்.

கள்ளை உண்டவருக்குத்தான் மயக்கம் வரும்
காமம் பார்த்தாலே மயக்கம் தரும்.

## 110 குறிப்பறிதல்

கண்ணொடு கண்ணோக்கிக் காதல் பரிமாறல்
பெண்ணவள் பங்கிலே பேராற்றல்எண்ணம்-
மறைப்பதைப் போல மனத்தை மனத்தில்
நிறைப்பதே காதல் நெறி.

*

இவளின் ஒருநோக்கால் நோய் வரும்
மறுநோக்கு அந்நோய்க்கு மருந்து தரும்.

கண்ணால் திருடும் இவள் பார்வை ஒரு சிறு பாகம்
காமத்தில் அதுதானே பெரும்பாகம்

பார்த்தாள், பின் பார்வையால் கெஞ்சித் தரை பார்த்தாள்
அதனால் என் காமப் பயிருக்கு நீர் வார்த்தாள்

நிலத்தைப் பார்ப்பாள் நான் பார்க்கும் போது
தான்பார்த்து மெல்லச் சிரிப்பாள் நான் பார்க்காத போது

பகையிலாக் கடுஞ்சொல்,பகைபோல் பார்வை
இவற்றால் தன் அன்பை உணர்த்துவாள் அப்பாவை

கண்ணொடு கண் இணைந்து நோக்கும் போது
வாய்ச் சொற்களால் பயன்தான் ஏது?

## 111 புணர்ச்சி மகிழ்தல்

தன்நோய் குறைப்பதற்குத் தானே மருந்தாகும்
இன்மகளின் மென்தோள் இனிமையினும்உன்னதமாய்ச்-
சேடனணை மாலுலகும் தேர்ந்திடுமோ?பேரின்பம்
ஊடலுணர் கூடல் உவப்பு.

*

அவள்தரும் இன்பம் ஐம்புலன் விருந்து
அவள்தரும் நோய்க்கு அவளே மருந்து

நீங்கச் சுட்டு நெருங்கக் குளிர்கிறதே இவள்தீக் கங்கு
இத்தகு தீயை இவள் பெற்றதும் எங்கு?

இவளது தோள்கள் மனோரஞ்சிதமோ?
விரும்பினவெல்லாம் தருகின்றனவே, எவ்விதமோ?

தோள்கள் அமுதோ,தீண்ட உயிர் தளிர்க்கிறதே
கூடி அறிய அறிய அறியாமை வளர்கிறதே

பாடுபட்டுப் பகுத்துண்ணும் இன்பம் எப்படி
இவஷிடன் கூடி நுகரும் இன்பம் அப்படி.

காற்றிடை புக முடியா அணைப்பு
இணையும் இருவரின் இன்பப் பிணைப்பு.

## 112 நலம் புனைந்துரைத்தல்

மதியே, உனையே மதியேன்யான் இப்பெண்
நிதியே அருகிருக்க நேர்ந்தால்குதிகொள்ளும்-
வேய்தோள்,வெறிநாற்றம்,வேலுண்கண்,மென்பாதம்
ஆய்மயிற் கென்னே அழகு?

*

என்னவள் மேனி அனிச்சத்திலும் மென்மை
குவளையும் நாணும் இவள் கண்களின் தன்மை

காம்பொடு சூடினாள் அனிச்சத்தின் போது
இலையெனும் இடை,அச் சுமை தாங்காது

மதியோ,மடந்தை முகமோ என்றே
கலங்கின நீர்நிலை மீன்களன்றே!

களங்கமென்று ஒன்று இவள் முகத்தேது?
மறுவுள மதி அதற்கு ஒப்பாகாது.

வானில் சுடர்விடும் நிலவுத் தோழி,
இவள் முகம்போல் சுடர்வையேல் நீ வாழி!

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மென்மையானவை
மாதர் அடிக்கு அவை நெருஞ்சிபோல் வன்மையானவை!

## 113 காதல் சிறப்பு உரைத்தல்

மைதீட்டோம் காதலர் எம் கண்ணில் வதிவதனால்,
வெய்துண்ணோம் நெஞ்சத்தில் மேவுவதால்தையலாள்-
ஆவியெனில்,நான்யாக்கை, ஆயிழைவாய் ஊறியநீர்
ஆவின்பால் தேன்கலந் தற்று.

*

பாலும் தேனும் கலந்தது போலே
அவளது உமிழ்நீர் இனிக்கும் மேன்மேலே

அவளுக்கும் எனக்கும் இடையே நட்பு
உயிரும் உடலும் இணைந்ததற் கொப்பு.

கருமணிப் பாவாய், போய்விடு உடனே
என்னவளுக்கு வேண்டும் அங்கு இடனே

அவளை மறந்தாலன்றோ நினைப்பதற்கு,
அவளின்றேல் எனக்கு உயிரெதற்கு?

என்னவர் என்னுள் இருப்பதனாலே
சூடாய் உண்ணேன் அவருக்குச் சுடும் என்பதாலே

அவரென்னுள்ளே நீங்கா திருக்கிறார் நன்று
ஊர்பேசும் அவர் பிரிந்தார்,அன்பிலர் என்று.

## 114 நாணுத் துறவு உரைத்தல்

காமத் துயரால் கருதரிய நாண்விட்டே
ஏமமடல் ஊர்தலின்வே றில்லையால்காமம்-
எரித்தும் மடலூரா ஏந்திழையாள் கொள்ளும்
பெருமைக்கும் ஈடோ பிற?

*

காமத்தில் உழன்றார்க் கேது ஏமாப்பு
மடலூர்தல் ஒன்றே அதன் காப்பு

பிரிவாற்றா உடலும் உயிரும் வாடும்
நாணம் துறந்து மடலேறக் கூடும்

காமம் என்னும் கடும்புனல் வெள்ளம்
நாணம், நல்லாண்மை அடித்துத் தள்ளும்

காமம் உழன்றும் பெண் மடலேறுவதில்லை
எனவே பெண்ணின் பெருமைக்கு இல்லை எல்லை

மறைப்பேன் காமம் பிறர் அறியாது
ஆனால், அஃதோ பறைசாற்றும் எங்கும் மறையாது.

நான் படும்பாடு தாம்படா அறிவிலார்
நான்காண நகைக்கிறார், சிறிதும் நிறையிலார்.

## 115 அலர் அறிவுறுத்தல்

அலராலே காமம் அடங்குமோ? தானே
மலராதோ? ஊரார் வளர்க்கும்அலரே-
எருவாக,அன்னைசொல் இன்னீராய், காமம்
பெருகுமே இன்னும் பெரிது.!

*

ஊரார் அலர் தூற்றுதல்
எங்கள் காதலுக்கு நீர் ஊற்றுதல்

அலரே எங்கள் காதலுக்கு ஊக்கம்
அஃதின்றேல் காதல் கொண்டுவிடும் தேக்கம்

பெறாத காதலும் பெற்றாற்போல் தோன்றும்
அலரால் அவ்வெண்ணம் என் நெஞ்சில் ஊன்றும்.

கள் உண்ண உண்ண மேலும் விருப்பம் மீறும்
காதலும் அலர் வெளிப்பட வெளிப்பட ஏறும்

எங்கள் காதல் பயிரை எது அழிக்கும்?
அலரெருவாய்,அன்னைசொல் நீராய் அது செழிக்கும்

நெய்யூற்றித் தீயைத் தணிக்க முடியுமா?
அலர்தூற்றி எங்கள் காதலை அணைக்க முடியுமா?

## 116 பிரிவு ஆற்றாமை

தொட்டால் சுடும்தீ, துணைவர் தனைப்பிரிந்து
விட்டால் சுடும்காமம்,விந்தையிதேஒட்டிமனம்-
கொண்டான் பிரிவனெனக் கூறல் பெருந்துன்பம்
உண்டோசொல் தாங்கும் உளம்?.

*

என்னிடம்போய்ப் பிரிவேன் என்று சொல்லலாமா?
அப்படிச் சொல்லி என்னை அவர் கொல்லலாமா?

அவரின் பார்வையால் மனம் மகிழ்வடைகிறது
'பிரிவேன்' என்பாரோ எனும் துயர் நெஞ்சைக் குடைகிறது

பிரிவேன் என்கிறாரே,அது என்ன சொல்லோ?
அப்படிச் சொல்ல ,அவர் நெஞ்சம் என்ன கல்லோ?

தலைவன் பிரிவைச் சொல்லும் வளையல் கழன்று
நான்மிக மெலிவேன் நெஞ்சம் உழன்று.

அன்புச் சுற்றமிலா ஊரில் வாழ்தல் கடினம்
இனியவரைப் பிரிந்து வாழ்வது அதனினும் கடினம்.

நெருப்பு, தொட்டால் சுடும்
காமநோய், பிரிந்தால் சுடும்.

## 117 படர்மெலிந்து இரங்கல்

உயிர்தண்டாய், காமம்,நாண் ஒவ்வோர் புறமும்
பயிலும் உடம்பினைப் பற்றித்துயர்தரும்-
எவ்வண்ணம் யான்மறைப்பேன்,எப்படி யான்புகல்வேன்
இவ்வண்ணம் வாட்டும் இடர்.

*

இறைக்க இறைக்க ஊற்று பெருகும்
மறைக்க மறைக்கக் காமம் மருகும்

இந்நோயை மறைக்க இயலவில்லையே
நாணம், நோய்தந்தவரிடம் சொல்ல விடவில்லையே!

காமக் கடல் ஒன்று கண்டேன்
கடக்கும் புணை காணாமல் துவண்டேன்

காமத்தின் இன்பம் கடலளவு பெரியது
அதனால் வரும் துன்பம் கடலைவிடப் பெரியது

இரவில் உலகமே உறங்குகின்றது
துணையின்றி என்மனம் கிறங்குகின்றது.

உள்ளத்தைப் போல் விழிகளால் செல்லமுடியவில்லையே!
நீர்சொரிந்து கலங்குகின்றன, தொல்லையே!

## 118 கண்விதுப்பு அழிதல்

நாணாதே அன்றவரை நாடவைத்த கண்ணிரண்டும்
காணாதே இன்று கரைவனவால்பேணாத-
நெஞ்சுடையார் தன்னை நினைந்ததனால் பெற்றனவே
துஞ்ச முடியாத் துயர்.

*

கண்கள் கண்டால் அவர்மேல் விழுகின்றன
காணாவிட்டால் அவரைக் காண அழுகின்றன.

காட்டிய கண்களுக்கு இல்லை நாணே
காட்டென இப்பொழுது அழுவன வீணே!

அவர் வந்தாலும் கண்கள் தூங்குவதில்லை
வராவிட்டாலும் அவை தூங்குவதில்லை

தூங்காமல் இக்கண்கள் அல்லற்படட்டும்
காமநோய் தந்தனவே,எக்கேடும் கெடட்டும்!

விழைந்து விழைந்து அவரைக் கண்டன அன்று
அழுது அழுது நீர்வற்றட்டும் இன்று.

வேறு பறைக்கு என்ன அவசியம்?
கண்களே சொல்லும் என்றன் இரகசியம்.

## 119 பசப்புறு பருவரல்

நீங்குமுன் மேனியிலே நீளப் படர்ந்தழகை
வாங்கும் பசலை வகையென்ன?-ஏங்குமென்
சாயலைத் தான்கொண்டு, தந்தாரே இப்பசலை
நோயினை அந்த நொடி.

*

இந்தப் பசலைக்குக் கர்வம் எப்படி வந்தது?
அந்த உரிமை அதற்கு அவர் தந்தது.

என்னழகையும் நாணையும் எடுத்துக்கொண்டுவிட்டார்
மாறாக நோயும் பசலையும் தந்துவிட்டார்

அவர் பிரிவு இந்தப் பசலைக்கு எப்படித் தெரிந்தது?
அவர் நீங்கிய உடனே என்மேல் வந்தது

அவர் அணைப்பிலிருந்து விலகினேன் சற்று
பசலை என்மேல் படர்ந்தது ஒரு சுற்று

என்னைப் பழிக்கும் ஊரார்க்கு என்ன வெறுப்பு?
இந்தப் பசலை வந்ததற்கு அவரன்றோ பொறுப்பு!

பசலை நன்றாய்ப் படரட்டும் ,கவலை இல்லை ஏதும்
அவர் நன்றாய் இருக்கிறாரெனத் தெரிந்தால் அதுபோதும்.

## 120 தனிப்படர் மிகுதி

காவடி போலவே காமம் இருபுறமும்
ஆவது தானே அழகாகும்மேவிடும்-
கைக்கிளைத் துன்பம் கருதாமல், காமனொரு
பக்கத்தில் நிற்பதனைப் பார்.

*

தன்னவர் தனையணைக்கும் பேற்றினை உற்றவர்
விதையில்லா காமக் கனியினைப் பெற்றவர்

காதலரால் விரும்பி அணைக்கப்படும் இதம்
பெண்களுக்குத் தரும் 'வாழ்கிறோம்' எனும் பெருமிதம்

இனிய காமம் காவடி ஒப்பது
ஒருதலைக் காமம் துன்பத்தில் உய்ப்பது

ஒருபக்கம் நிற்பது காமனின் நெறியோ?
என் துயர் காணான் ஈதென்ன முறையோ?

அவரோ அன்பு காட்டார்,என்மனம் கனக்கிறதே,
அவரைப் பற்றிய புகழ்ச்சொல் அப்படியும் இனிக்கிறதே!

அன்பில்லாதவரிடம் நெஞ்சே,நம்துன்பம் சொல்கிறாயே
வேறு வேலை இல்லையா,எனைக்கொல்கிறாயே!

## 121 நினைந்தவர் புலம்பல்

வருந்தும்மல் வாரா வகையேபோல் அன்பர்
விரும்பினார் போன்று விரும்பார்இருந்தும்-
நினக்கின்றேன்,என்றன் நினைவினிலே தோன்றி
எனைத்தொன்றும் காயார் இவர்.

*

கள்ளை விடக் காமம் இனியது
நினத்தாலே இனிக்கும் கனியது

தும்மல் வருவதுபோல் வாராததேனோ?
அவர் நினைப்பதுபோல நினைக்காததால் தானோ?

எப்பொழுதும் அவர் இருக்கிறார் என் நெஞ்சத்திலே
நான் அப்படி இருக்கிறேனோ அவர் நெஞ்சத்திலே?

நான் வரவொட்டாமல் நெஞ்சுக்குக் காவல் போடுகிறார்
வெட்கம் கெட்டவர்,ஓயாதென் நெஞ்சில் வந்து கூடுகிறார்

அவர் சினப்பதில்லை, அவரை எவ்வளவு நினைத்தாலும்
இது எம் காதலர் செய்யும் சிறப்புப் போலும்!

நிலவே,வாழ்கநீ தேய்ந்து குறையாதே !
அவரை நான் காணும்வரை மறையாதே!

## 122 கனவு நிலையுரைத்தல்

தூங்கினால் தோளின்மேல் தோய்பவரே,தூக்கத்தில்
நீங்கினால் நெஞ்சில் நிறைகின்றார்ஏங்கி-
நனவிலே காணா நலிவெதற்கு?தூக்கக்
கனவினிலே தாம்கண்டக் கால்.

*

கனவு காதலை உயிர்க்கும் மருந்து
கைமாறாய் அதற்கு என்செய்வேன் விருந்து?

நனவிலே அவர்வரின் வளரும் காதல் பயிர்
கனவிலாவது காண்பதால் வாழும் என் உயிர்

நனவில் இலாததைக் கனவு தருகிறது
கனவே போதுமே, நனவேன் வருகிறது?

அக்கொடியர் நனவில் வந்து நல்கார் இன்பம்
கனவிலே வந்து,ஏன் தருகிறார் துன்பம்?

தூங்கும் போது என்தோளில் நிறைகிறார்
விழிக்கும் போது நெஞ்சில் உறைகிறார்

நீங்கி விட்டார் என்கின்றனர் ஊரார்
கனவிலே அவர் வருவதை அவர்கள் ஓரார்.

## 123 பொழுது கண்டு இரங்கல்

காதலர் இல்வழிப் போதரும் மாலையே,
வேதனை தந்தெமை வீழ்த்துதல்நீதமோ -?
போதென வந்தநோய் பூத்து வருத்திடப்
போதுமே உன்றன் பொழுது!

*

ஏ மாலையே, நீ உயிர்நீக்கும் வேல்
வந்தென் துயரைக் கூட்டுகிறாயே மேன்மேல்!

ஏ மாலையே, நீ மயங்கி வருவதேனோ?
உன் துணையும் பிரிந்ததோ,அதனால் தானோ?

காதலர் பிரிவு இந்த மாலைக்கு எப்படித் தெரிகிறது?
கொலைக்களத்துப் பகை போலல்லவா வருகிறது!

காலைக்கு நான் செய்த நன்மைதான் என்ன?
மாலைக்கு நான் செய்த தீங்குதான் என்ன?

காலையில் அரும்பி,பின் முகையாகி
மாலை இந்நோய் மலரும் எனக்குப் பகையாகி.

பொருள்வயின் பிரிந்தார் என்று தாங்கினேன் உயிர்
மாலை வந்தால் அவரை நினைந்து நீங்குதே உயிர்!

## 124 உறுப்பு நலன் அழிதல்

வீங்கிய தோள்மெலிய மெல்வளை தான் நழுவ
ஏங்கிய நெற்றி எழில்தேயபாங்கோடு-
கூடிப் பிரிந்தவிதம் கொண்டுகண் நீருகுக்க
வாடியே நிற்கும் மலர்!

*ழ்

அந்தோ,இக் கண்!நீரும் சுடுகிறதே
காதலரின் அன்பின்மையைத் தெரிவித்து விடுகிறதே

என்கண்கள் மலர்கஷிக்கு ஒப்பாகக் காணும்
காதலர் பிரிவினால் அவை அம்மலர்கஷிக்கு நாணும்

அன்று வீங்கிய தோள்கள் இன்று நலிந்தன
ஊரார்க்குப் பறைசாற்றும் வண்ணம் மெலிந்தன.

என் தோள் மெலிவால் அவரைக் கொடியர் என்பர் ஊரார்
அச்சொல் என்னை வருத்தும் நிலை அவர் தேரார்

அணைத்த கைகளைச் சற்றே விலக்கினேன் பற்றி
அப்பொழுதே பசலை கொண்டது அவள் நெற்றி

இறுகிய அணைப்பிடைக் காற்றுப் புகுந்தது
அவஷிடைய கண்களில் உடனே பசலை மிகுந்தது.

## 125 நெஞ்சொடு கிளத்தல்

நினைந்து மருகுவதேன் நெஞ்சே, அறிவேன்
சினந்தே நீ பொய்யாகச் ž றல்முனைந்தவரைக்-
காணநீ சென்றால் இக் கண்களையும் கூட்டிச்செல்
வீணிலெனைத் தின்னும் விழி.

*

இக்காம நோய் என்னை வதைக்கிறது தின்று
நெஞ்சே, சொல்நீ இதைத் தீர்க்கும் மருந்தொன்று.

நெஞ்சே, அன்பற்றவரை நினைந்து நோகிறாயே
அறியாமையன்றோ நின்செயல்? வீணாக வேகிறாயே!

அவரைக்காணக் கண்கள் தின்கின்றன என்னை
நீ சென்றால்,இக்கண்களையும் கூட்டிச் செல் முன்னை

நெஞ்சே, ஊடல் காலத்தும் நீ பிணங்கியதில்லை
என்றுதான் அவர்க்கு நீ இணங்கியதில்லை?

நெஞ்சே, பிரிந்துவிட்டாரே என்று வருந்துகிறாய்
பின் ஏன் பிரிந்தவர் பின்சென்று பொருந்துகிறாய்?

உள்ளத்தே அவர் நீங்கா திருக்கின்ற போது
எங்கெங்கோ தேடுகிறாய் நெஞ்சே, அறியாது.

### 126 நிறையழிதல்

காமம் மறைத்தேனா,கள்வன் மொழியந்த
சேம மதிலைச் சிதைத்ததுவேஏமமாய்-
ஊடவே சென்றேனா,ஓடும் என் நெஞ்சத்தால்
கூடியே வந்தேன் குளிர்ந்து.

*

என்மனம் நாணத்தாழிட்ட நிறைக் கதவை அடைக்கும்
காமக் கோடரியோ அக்கதவைப் பிளந்து உடைக்கும்

காமத்திற்குக் கண்ணோட்டமே இல்லை
நள்ளிரவிலும் நெஞ்சை ஏவுகிறது, பெருந்தொல்லை

காமத்தை ம€றைக்க முயல்கிறேன், முடிகிறதா
குறிப்பின்றித் தும்மல்போல் வெளிவந்து விடுகிறதே!

காமநோய் கொண்டோர் சொலமுடியா ஒன்று
பிரிந்தோரின் பின் செல்ல மாட்டோம் என்று

காதலரின் இனிய மொழியே கொடை
அதுதான் பெண்மை அரணை உடைக்கும் படை

ஊடத்தான் தலைவனிடம் சென்றேன்
நெஞ்சம் கலந்தது,எனவே கூடி நின்றேன்

## 127 அவர்வயின் விதும்பல்

மரமெல்லாம் ஏறி வழிபார்க்கும் நெஞ்சம்
வருகையில் தொக்கும் என்வாழ்க்கைஒருநா-ள்
எழுநாள்போல் செல்கிறதே,என்செய்வேன்,வந்தால்
விழுவேன்அம் மார்பே விருந்து.

*

கண்கள் வழிபார்த்து மங்கி விட்டன
நாட்களை எண்ணி எண்ணி விரல்கள் தேய்ந்துவிட்டன

பிரிந்து சென்றார் வெற்றியை வரித்து
அவர் வரவை எதிர்நோக்கி உள்ளேன் உயிர்தரித்து

இணைப்புத் துறந்து சென்றவர் வரவை எண்ணி
என்நெஞ்சம் கிளையில் ஏறிப் பார்க்கும் தவம் பண்ணி

அவர் வரட்டும்,ஏ,விரகமே
நீ தரும் துன்பம் உடனே விலகுமே!

அவர் வந்ததும் என்ன செய்வேன்,ஊடுவேனோ
கூடுவேனோ,இல்லை,ஊடிப்பின் கூடுவேனோ?

தலைவன் வரவை எதிர்பார்த்திருக்கும் போது
ஒருநாள் எழுநாளாய்ச் செல்லும் அப்போது.

## 128 குறிப்பறிவுறுத்தல்

கட்டி மறைத்தாலும் கண்ணே குறிப்பாகக்
கொட்டிவிடும் பெண்ணின் குணத்தைமொட்டில்-
உறையும் மணம்போல் ஒளிர்புன் னகைக்குள்
நிறையுமே காதல் நிலை!

*

நீ என்னிடம் மறைப்பது எதனை?
உன் கண்ணே சொல்லிவிடும் என்னிடம் அதனை.

கோத்த மணிமாலையில் தெரியும் நூல்போல்
இவளது அணியில் தெரியும் ஆசை என்மேல்

முகைமொக்குள் வாசம் மறைந்திருக்கும்
இவள் நகைமொக்குள் ஓர்குறிப்பு நிறைந்திருக்கும்

அவள் மறைவாகச் செய்த குறிப்பே விருந்து
அந்தக் குறிப்பில் உண்டு என்நோய் தீர்க்கும் மருந்து.

தலைவன் மனத்தில் பிரிவதற்கு எழுந்தது எண்ணம்
அது எப்படித் தெரிந்தது வளையல்கஷிக்கு முன்னம்?

நேற்றுத்தான் தலைவர் சென்றார் பிரிந்து
ஏழுநாள்பசலை என்மேல் வந்ததே வரிந்து.!

## 129 புணர்ச்சி விதும்பல்

என்ன இடர் செய்தாலும் இல்லாத போதுகண்
அன்னவனைக் காண அவாக்கொள்ஷிம்தன்னவனைப்-
பார்த்தால் பழிமறப்பாள்,பார்க்காத வேளையிலே
ஆர்த்தெழுவாள் காய்வாள் அவள்.

*

எண்ணினாலே போதை,கண்டால் மகிழ்ச்சி
கள்ஷிக்கில்லை,அவை காமத்தின் நிகழ்ச்சி

தலைவன் அன்பின்றி அவமதித்த போதும்
என்கண்கள் அவனைக் காணத் துடிக்கும் எப்போதும்

மை எழுதும்போது கண்கள் கோல் காண்பதில்லை
தலைவனைக் கண்ட இடத்து நானும் பழி காண்பதில்லை

அவனைப் பார்க்கும் போது தவறானவை காணேன்
அவனைக் காணா இடத்து தவறல்லவை காணேன்

கட்குடியர்கட்குக் கள்ளின் மேல் ஆசை எப்படியோ
எவ்வளவு இன்னாநீ செயினும் உன்மார்பு எனக்கப்படியே!

காமத்தின் தன்மை மலரைவிடவும் மென்மை
சிலரே பெறுவார் அம்மென்மையின் நன்மை.

## 130 நெஞ்சொடு புலத்தல்

நெஞ்சம் உறவாக நில்லாமல் காதலரே
தஞ்சம் எனவங்கே சாய்கிறதேஎஞ்சுகிற-
நாணும் துறந்தேன்என் நாணா மடநெஞ்சால்
பேணும் என் நெஞ்சே பிணி.

*

ஏ நெஞ்சே, நீ எப்பொழுதும் அவர்பக்கம்
அவர் நெஞ்சைப் பார், உனக்கில்லையே வெட்கம்!

நெஞ்சே, கெட்டார்க்கு நட்டார் இல்.
அவர்பக்கம் தானே செல்கிறாய்,செல்,செல்

தலைவனைப் பெற்றால் பிரிவச்சம்,பெறாவிடினும் அச்சம்
என்நெஞ்சம் என்றும் இடும்பையின் உச்சம்

இந்த நெஞ்சுக்கு வந்ததுதான் என்ன?
அவரை நான் நொந்தால் முனைகிறதே என்னைத் தின்ன!

அவரைக் கொஞ்சமும் மறக்காததாலே
நாணும் துறந்தேன் இம்மட நெஞ்சத்தாலே

என் நெஞ்சமே எனக்குத் துணையாகாத போது
என் துன்பத்துக்குத் துணை இனி வேறு யாது?

## 131 புலவி

தண்ரும் தண்ணிழலும் சார்ந்த இனிமைபோல்
கொண்கண்பால் ஊடலைக் கொண்டிடுகஉண்ணுவதில்-
உப்புக் கலப்பதுபோல் ஊடல் கலப்பதுதான்
ஒப்பில்லா இன்ப உவப்பு.

*ழ்

ஊடல் செய்யாது விடக்கூடாது இன்று
அவர்படும் துன்பத்தைச் சிறிது காணலாம் நன்று

உணவில் உப்பென அளவாக வேண்டும் புலவி
அப்பொழுதுதான் இனிக்கும் கலவி

ஊடலைத் தணிக்காமல் ஒதுங்குதல் ஆகாது
அது துன்பத்தின்மேல் துன்பம் தாராது போகாது

ஊடலில் உண்டு கவலை ஒன்று
கூடல் நீட்டிக்குமோ இல்லையோ என்று.

பிரிவுத் துன்பம் இல்லையாயின் காமம் கனிபோன்றது
ஊடல் இல்லையாயின் காமம் கருக்காய் போன்றது

நிழலிடை நீர் அருந்த இனிது
அன்புடையார் கண்ணே ஊடலும் இனிது.

## 132 புலவி நுணுக்கம்

இம்மை பிரியேன்யான் என்றேன் உடனழுதாள்
தும்மல் அடக்கினேன் துன்புற்றாள்தம்போக்கில்-
தும்மினேன் யாருள்ளித் தும்மினீர் என்றழுதாள்
அம்மவோ ஊடல் அழகு!

*

ஊடியிருந்தேன், தும்மினார் சற்றே
வாழ்கெனச் சொல்லுவேன் எனும் நினைப்புற்றே

நான் மாலையைச் சூடினும் காய்வாள்
யாருக்குக் காட்ட எனச்சொல்லிப் பாய்வாள்

யாரினும் அன்புடையேன் என்றேன்,ஊடினாள்
யாரினும் யாரினும் எனக் கேட்டுச் சாடினாள்

உன்னை நினைத்தேன் என்றேன்,வாடினாள்
ஏன் மறந்தீர் எனக்கேட்டு ஊடினாள்

தும்மலை அடக்கினேன், அழுது நின்றாள்
'யார்நினைப்பதை மறைத்தீர்'? சொல்லும் என்றாள்

அவளது அவயவங்களை நோக்கினேன் வியந்து
'யார்யாரோடு ஒப்பிடுகிறீர்?' எனக்கேட்டாள் நொந்து.

## 133 ஊடல் உவகை

குறையே இலையெனினும் கொண்டானோ டூடல்
நிறைவே பெறக்கொள் நெறியாம்முறையாக-
ஊடிப்பின் கூடும் உவகையைக் கொண்டிடுக
ஈடில்லா இன்பம் இது.

+

தவறு அவர்மேல் இல்லை,என்றாலும் ஊடுவேன்
அவர் வேண்டித் தணிக்கட்டும் ,பின்பு நான் கூடுவேன்

உள்ளம் ஒன்றியவர் தன்னோடு ஊடும்
இன்பத்திற்கு ஈடோ விண்ணவர் நாடும்?

உண்பதினும் உண்டது செரித்தல் இனிது
அதுபோல் கூடலினும் அதன்முன் ஊடல் இனிது

ஊடலில் தோற்றால் கூடலில் வெற்றி
அணைக்கும் முயக்கில் வியர்க்கும் நெற்றி

இவள் இன்னும் நன்றாக ஊடட்டும்
அதைத் தணிக்க இந்த இரவு நீடிக் கூடட்டும்

ஊடுதல் காமத்திற்கு இன்பம்
ஊடலுக்கு, அதன்பின் வரும் கூடல் இன்பம்.

## எங்கள் திருக்குறள்

ஏழு சிமிழினில் இப்பெரும் அண்டமே
ஏறி அமர்ந்த பின்னும்
இன்னும் இடமுள தென்று சொலும்படி
ஏற்றமே பெற்றதெது?-உயிர்
ஊற்றமே உற்றதெதுஅது-

எங்கள் திருக்குறள்,எங்கள் திருக்குறள்
எங்கள் திருக்குறளே!

ஆழம் உடையதாய் ஆழியைச் சொல்வதை
அப்புறம் தள்ளி வைத்து
ஆழ மனைத்திலும் ஆழ மெனச்சொலும்
அற்புதம் கண்டதெது?-உயர்
சொற்பதம் கொண்டதெது?-அது

எங்கள் திருக்குறள், எங்கள் திருக்குறள்
எங்கள் திருக்குறளே!

இன்றையச் சிந்தனை என்றயல் நாட்டினர்
எண்ணும்நிர் வாகத்தினை
இன்றிலும் மேம்பட்ட தென்று வியந்திட
ஏற்றிடும் விந்தையெது?-புவி
போற்றிடும் சிந்தையெது?-அது

எங்கள் திருக்குறள், எங்கள் திருக்குறள்
எங்கள் திருக்குறளே!

ஒன்றிது போதும் உலகினில் செந்தமிழ்
ஊன்றி நிமிரவென
ஓதி உணர்ந்தவர், உண்மை அறிந்தவர்
ஓங்கி உரைப்பதெது?-நெறி
வாங்கி விரிப்பதெது?-அது

எங்கள் திருக்குறள், எங்கள் திருக்குறள்
எங்கள் திருக்குறளே!

வள்ளுவ வாயில் 148




இந்தவய துக்குத்தான் ஏற்புடைத் தென்னாமல்
எந்தவய துக்கும் இது.

கவிமாமணி இலந்தை சு இராமசாமி



அறிவியல் பார்வை, சந்தம்
ஆர்ந்திடும் கவிதை ஓட்டம்
செறிந்திடும் ஆய்வு நோக்கம்
சிந்தையில் தெளிவு, ஆழம்
பொறியியல் தேர்ச்சி என்றே
புலமைகள் பலவாய்ப் பெற்றுச்
சிறந்திடும் இலந்தை, மேன்மைச்
செந்தமிழ் பெற்ற முத்து.

திருக்குறள் உயிரோட் டத்தைச்
சிந்தையில் பிடித்து வந்து
சுருக்கியும், விரித்தும் இங்கே
துய்யநன் மாளி கைக்குப்
பொருத்தமாய் வாயில் ஒன்றைப்
புதுமையாய் நிறுவி யுள்ளார்
வரித்திடும் புதுமை நன்னூல்
**வள்ளுவ வாயில்** வாழ்க!

கவிமுரசு
**வீரபத்ர வில்லவராயர்**